*Ūḻiyaṉ*

*Malar 14, itaḻ 33*

*February 15, 1935*

Record no. 148

# ஊழியன்

மலர் 14. 15—2—35 இதழ் 33.




கீழ் மகாசமுத்திரங்களில் செல்லும் 'சார்பிரக்கன்'







# ஊழியன்

ஆசிரியன்—ராய. சொக்கலிங்கன்.

மலர் கச. சென்னை, பவஹு மாசிமீ 4உ வெள்ளி (15-2-1935) இதழ் கக

*இந்தியத்தாய் முடிசூடி எழிற்சிங்கா*
*தனமேறி ஈடிலாது*
*சொந்தவர் சேப்புரியத் துயர்போக்கி*
*யாவருமே சுகவாழ் வெய்த*
*இந்நிலம் வந்தவருள் இலைபிறப்பில்*
*இழிவுயர்வென் இயற்கை ஓங்க*
*நந்தலிலா ஊழியமே நான்கொண்டேன்*
*நல்லனவெந் நாளும் வாழ்க!*

## ஜின்னா கட்சி

இந்தியச் சட்டசபையின் மொத்த எண்ணிக்கையில் ஜனாப் மகமதலி ஜின்னாவைத் தலைமையாகக்கொண்ட கட்சி அங்கத்தவர் சுருக்கம். இப்போதைய சபையில் ஏறக்குறையச் சரிபாதிக்குக் கொஞ்சமே குறைந்திருக்கிறது, தேசியக் கட்சியோடு கூடிய காங்கிரஸ்க் கட்சி. தேசீயக் கட்சியினர்க்கும் காங்கிரஸ்க் கட்சியினர்க்கும் வகுப்புத் தீர்ப்பு ஒன்றில் தவிர வேறு எதிலும் கருத்து வேறுபாடேயில்லை. மற்றெல்லாவற்றிலும் தேசீயக் கட்சி காங்கிரசோடுதான் சேருகிறது. இருந்தும்—இந்த இரண்டு கட்சியும் சேர்ந்து சுமார் அறுபது அங்கத்தவர் இருந்தும்கூடக் காங்கிரஸ்த் தீர்மானங்கள் முழுதும் வெற்றி பெற வழியில்லாதிருக்கிறது. சிறுபான்மை அங்கத்தவரைக் கொண்ட ஜின்னா கட்சி எங்கு சேர்கிறதோ அங்குதான் வெற்றி.

ஒரு புறம் உத்தியோகஸ்தர்களும் நியமன அங்கத்தினரும் சேர்ந்த அரசாங்கக் கட்சி. மற்றொரு புறம் காங்கிரஸ்க் கட்சி. இரண்டுக்கும் நடுவே ஜின்னா கட்சி. இது தவிர எந்தக் கட்சியும் இல்லாத தனிப்பட்டவர் சிலர். அவர் சமயம்போல் அங்கும் இங்கும் சேர்கின்றனர். அவர் இருக்கட்டும். சிறப்பாக இன்றைய இந்தியச் சட்டசபையை நோக்கினால் சில பேரைக் கைக்குள் வைத்திருக்கும் ஜின்னா நோக்கப்படி தீர்மானங்கள் அமையும் நிலைமை ஏற்பட்டு விடுகிறது.

காங்கிரஸ், அரசாங்கம் ஆகிய இரண்டு பெரிய கட்சியார்க்கும் வெற்றி தருவதோ தோல்வி கொடுப்பதோ இன்று ஜனாப் ஜின்னா கையில் இருக்கின்றன. ஜின்னா கட்சியார், தங்கட்கு வேண்டியதற்கு அரசாங்கத்தாரோடு சேர்ந்துகொண்டு பெரும்பான்மையால் தீர்மானத்தை நிறைவேற்றித் தங்கள் சமூகத்துக்கு மிதமிஞ்சிய உரிமையை நிலைநாட்டிக் கொள்கிறார்; தங்கட்கு எந்த அளவு அரசாங்கத்தை எதிர்க்க வேண்டுமோ அந்த வரையில் அரசாங்கத்தை முற்றும் எதிர்க்கும் காங்கிரஸ்க்காரரைச் சேர்த்துக் கொண்டு மறுபுறம் வெற்றி பெறுகிறார். எனவே ஒன்றுக்கொன்று முரண்பட்ட மற்ற இரண்டு கட்சிகள் இல்லையென்றால் ஜின்னா கட்சி இருந்த இடம் இல்லாமற் போய்விடும். இந்த உண்மையைக் கொஞ்சமாவது உணர்ந்து ஜின்னா கட்சியார் நியாய வழி கடைப் பிடிப்பதாகத் தெரியவில்லை.

இன்றைய இந்தியச் சட்டசபையை மகமதலி ஜின்னாவால் ஆட்டிவைக்க முடிகிறது. கிடைத்ததை விடவேண்டாம் என எண்ணி அவர் ஆட்டி வருகின்றார். கூட்டுக் கமிட்டி அறிக்கைக் கண்டனத் தீர்மானத்தில் ஜனாப் ஜின்னா கட்சியினர் நடந்து கொண்ட முறையை நடுநிலையாளர் எவரும் அங்கீகரிக்க மாட்டார். அதில் ஜனாப் ஜின்னா தாம் ஒரு திருத்தத்தைக் கொண்டு வராமல் காங்கிரஸ்க்காரரோடு சேர்ந்து அரசாங்கத்தைத் தோற்கடித்திருந்தாரானால் தேசத்தின் ஆணித்தரமான ஒற்றுமை அன்னிய நாட்டார் செவிகளைத் தொளைத்திருக்கும். தாம் உயிர்க் கொள்கையாகப் போற்றி வளர்க்கும் வகுப்பு வாதம் ஒன்றில் மட்டுமாவது மாறுபட்டுப் போயி

ருக்கலாம். அதில் தேசீயக்கட்சி ஒரு புறம் இருக்கும். இருந்தாலும் எது நியாயக்கட்சி என்பது ஒரு புறமிருக்க; காங்கிரஸ்க்காரர் ஒற்றுமை ஒன்றே கருதி நடுநிலைமை வகித்து விடுவர்; அரசாங்கம் அவ் விஷயத்தில் ஜின்னு கட்சியை ஆதரிக்கத் தயாராகக் காத்துக் கொண்டிருக்கிறது. எனவே அரசாங்கத்தோடு சேர்ந்து வகுப்புரிமையை நிலைநாட்டிக் கொள்ளத் தடையில்லை. பாழும் வகுப்புச் சனியன்தான் இன்று இந்தியாவைச் சூறையாடுகின்றது. அது தவிர மற்றதிலாவது காங்கிரசோடு சேர்ந்திருந்தால் நன்ருக இருந்திருக்கும்.

ஆனல் ஜனுப் ஜின்னு அப்படிச் செய்யவில்லை. வகுப்பு வாதத்தில் அரசாங்கத்தை ஆதரித்து வெற்றி பெற்ருர்; காங்கிரஸ் சார்பாகக் கூட்டுக் கமிட்டியை அடியோடு நிராகரிக்கும் ஸ்ரீமாங் புலாபாய் தீர்மானத்தையும் அரசாங்கத்தோடு சேர்ந்து தோற்கடித்தார். கூட்டுக் கமிட்டி அறிக்கைக்குச் சில வகையில் கண்டனத் தீர்மானம் ஒன்றைக் கொணர்ந்து அரசாங்கத்தார் எதிர்ப்புக் கிடையே, காங்கிரஸ்க்காரர் தம் தீர்மானத்தை ஆதரிக்கும் நிலைமையை உண்டாக்கி அதிலும் வெற்றியை யடைந்தார். காங்கிரஸ்த் தீர்மானம் தோற்றது ஜின்னுவினுல்தான். எனினும் அதே ஜின்னுவின் திருத்தத்தையாவது ஆதரித்துத் தொலைக்க வேண்டிய அவசியம் பெரிய கட்சியாகிய காங்கிரஸ்க் கட்சிக்கு ஏற்பட்டுவிட்டது. ஜின்னு திருத்தம் வென்றதாகவும் புலாபாய் திருத்தம் தோற்றதாகவும் சட்டப்படி கொள்வது சரியே யெனினும் கூர்ந்து நோக்கும்போது உண்மை வெற்றி வேறு என்பது புலனுகாமற் போகாது. ஜின்னு தீர்மானத்தைக் காங்கிரஸ் ஆதரித்ததாலேயே வென்றது; காங்கிரஸ்த் தீர்மானத்தை ஜின்னு எதிர்த்ததாலேயே தோற்றது.

காங்கிரசின் திருத்தத்திற்குச் சாதகமாகக் கிடைத்த ஓட்டு 61. அதற்குப் பாதக ஓட்டு 72. பதினெரு ஓட்டுக் குறைவு. இதில் அரசாங்கச் சார்பில் ஓட்டு எத்துணை? சில மாகாணச் சட்டசபைகளில் நடந்து கொண்டது போல அரசாங்கச் சார்பினர் ஓட் கொடாமல் நடுநிலைமை வகித்திருந்தால் எராளமான மெஜாரிட்டியில் காங்கிரஸ்த் திருத்தம் வென்றிருக்கும். ஆனல் அரசாங்கத்தார் அப்படிச் செய்யவில்லை. ஏன்? அவர்கள் பைத்தியக்காரர்களா? அவர்கள் நடுநிலைமை வகித்த சட்டசபைகளில் தங்கள் சார்பாகத் தலையாட்ட ஆட்கள் இருந்தனர். இன்றைய இந்தியச் சட்டசபை நிலைமை அப்படியில்லை. அரசாங்கம் நேர்மையைக் கடைப் பிடித்து நடுநிலைமை வகித்திருந்தால் கூட்டுக் கமிட்டி அறிக்கை சொல்லிக் கொள்ளாமல் புறப்பட்டிருக்கும்? எனவே தங்கள் ஓட்டுரிமையை உபயோகித்து விட்டனர். என்ருலும் ஜின்னு கட்சியும் கொஞ்சம் தொல்லையைக் கொடுத்துத்தான் விட்டது. ஜின்னு கட்சி பூரணமாகக் காங்கிரசோடு சேர்ந்து விடுமானுல் அரசாங்கத்திற்கு முழுத் தோல்வியைத் தவிர வேறில்லை. ஜின்னுவின் திருவுள்ளத்தில் பாரத மாதாதான் புகுந்து தேச விடுதலைக்குப் பின்னரே மற்றது என்ற உயர்ந்த கருத்தை உதயமாக்குதல் வேண்டும்.

---

# இடி முழக்கம்

## தலையசைந்தாலும் உறுப்பு அசையாதோ?

காந்தி-இர்வின் ஒப்பந்தப்படி ஏழை மக்களுக்கு அளிக்கப்பட்ட உப்புக் காய்ச்சும் உரிமை பறிமுதலாயிற்ரு என்று கேட்கப்பட்ட கேள்விக்கு சர் ஜார்ஜ் ஷுஸ்டர் 'இல்லை' என்று பதிலளித்தது நேயர்கட்குத் தெரியும். சமீபத்தில் பெல்லாரி ஜில்லாவிலுள்ள 8 கிராமங்கள் தங்கட்கு உப்புக் காய்ச்சு முரிமையைக் கொடுக்கவேண்டுமென்று ஜில்லா மாஜிஸ்திரேட்டிடம் விண்ணப்பம் செய்துகொண்டார்கள். அதற்கு ஜில்லா மாஜிஸ்திரேட்டான எப் டபிள்யூ. ஸ்டிவர்ட் என்பவர் 'முடியாது' என்று திருவாய் மலர்ந்தருளிவிட்டார். இந்தப் பெரியவர்தான் சில வருடங்கட்கு முன்பு குண்டூரில் காந்திக் குல்லா மீது சீறி விழுந்தவர். தலைமை அதிகாரிகள் ஒத்துக்கொண்டாலும், குட்டி உத்தியோகஸ்தர் இடையில் வந்து விழுவதைப் பார்த்தால், இந்த இந்திய சர்க்காரில் தலையசைந்தாலும் உறுப்பு அசையாதுபோல் தோற்றுகிறது.

## சென்னை சினிமாக்காரர்கள் கவனிப்பார்களா?

பெப்ரவரி 8-ந்தேதி காசி இந்து சர்வகலாசாலையின் பட்டமளிப்பு விழா பண்டித மாளவ்யாஜீயின் தலைமையில் பிரமாதமாக நடைபெற்றது. கவியாசர் ரவீந்திரர் முதலிய பல பிரமுகர்கள் வந்திருந்ததோடு சர்வகலாசாலைக் கட்டிடம் முழுதிலும் கோலாகலம் நடனமாடிற்ரும். அக்காட்சிகள் முழுவதையும்—கவிதாகூர், மாளவ்யாஜீ ஆகியோர் பிரசங்கங்கள் உட்பட—கொல்ஹாப்பூர் சினிடோன் கம்பெனியார் பேசும் படமாகப் பிடித்தார்கள். விழா வன்று சர்வகலாசாலையில் சினிமாக் கம்பெனியாரின் வேலையே மிக மும்முரமாக நடைபெற்றது என்று சொல்லப்படுகிறது. இந்தியாவில் கல்விக்காகச் சினிமாப்படம் உபயோகப் படுத்தப்படுவதில் இதுதான் முதல்தடவை. அந்தப் பாக்கியத்தை கொல்ஹாப்பூர் கம்பெனியார் பெற்றிருக்கிருர்கள். இவ்வாறு நவீன காலத்தில் பரந்துவரும் சினிமாக்கலையைக் கல்வி அபிவிருத்திக்காகவும், தேசாபிமான முன்னேற்றத்திற்காகவும், சீர்திருத்தப் பிரசாரத்திற்காகவும் உபயோகிப்பதே காலத்திற்கேற்ற செயல். அவ்வாறு செய்யாது தமிழ்நாட்டு சினிமாக் கம்பெனிகள், இறந்துபோன தாராசசாங்க விஜயத்தையும், துரௌபதையின் வஸ்திரத்தை உரிவதையும், நல்லதங்காள் குழந்தைகளைக் கொல்வதையும் படம்பிடிக்கப் பாடுபட்டால் எவ்வளவு கேவலம்! தனி நாகரிகம் சிறந்த இந்தக் காலத்திலும் நாடகக்காரர்கள் கைவிடப்போகும் சரித்திரங்களைப் படம் பிடிப்பதென்ருல் எவ்வாறு சிரியாதிருப்பது? எனவே சென்னை சினிமாக்காரர்கள் கொல்ஹாப்பூரைப் பின்பற்றுவார்களா?

## வேண்டுவோர் ஆண்டால்?

பரோடா சமஸ்தான திவான் சென்றவாரம் 1933–34-ம் வருஷத்திய அறிக்கையை அரசர் முன் சமர்ப்பித்தார். அதில் அடியில் வரும் பகுதிகள் காணப்பட்டன:—

"பிரஸ்தாப வருடத்தில் தொழிலபிவிருத்தி ஏற்பட்டது. 11 லட்சம் ரூபாய் விவசாயிகட்கு வரி வஜா செய்யப்பட்டது. பல ரோடுகள் போடப்பட்டன. பல கிணறுகள் வெட்டப்பட்டன. ஓஹாத் துறைமுகம் விருத்தியாயிற்று. பல சமூகங்களும் ஒருவருக்கொருவர் ஒற்றுமையாக விருந்தனர்"

மேற்படி சீர்திருத்தங்களும் அவற்றைவிட அதிகமாகவும், உற்ற மனிதர் ஒரு நாட்டை ஆண்டால், ஏற்படலாம். பரோடா மேற்படி நன்மைகளோடு 11 லட்சம் வரிவஜா செய்து கொடுத்தது மெச்சத் தகுந்ததாம்.



# அசெம்பளியில் புலாபாய் கர்ஜனை!

கூ. க. அறிக்கையைப்பற்றித் திரு. புலாபாய் டெல்லிச் சட்டசபையில் பேசியதின் சாரம்.

### 30 வருடத்திய சம்பந்தம்

சென்ற 30 வருடங்களாக இருந்த பிரிட்டிஷ் அரசாட்சி பொது மக்களிடை ஒரு எதிர்ப்பை உண்டுபண்ணி யிருக்கிறது. அதைப்பற்றி வருத்தப்பட்டுக் கொண்டு இராது காரணத்தை ஆராய வேண்டும். உலக யுத்தத்தில் பிரிட்டனுடன் சேர்ந்து தனது ஆட்களையும் பணத்தையும் கொடுத்தோம். நாம் பிரிட்டனின் விடுதலைக்காகப் போராடினேம். ஆனல் ஆட்சி செய்யப்படும் மக்களின் விடுதலைக்காக போராடினேம் என்று கூறப்பட்டது. யுத்த நெருக்கடியில் கொடுக்கப்பட்ட வாக்குறுதிகள் எல்லாம் மறக்கப்பட்டும், இல்லை என்று சொல்லப்பட்டும், குறைக்கப்பட்டும் போயின. துரதிர்ஷ்ட வசமாக அதுதான் எங்கு பார்த்தாலும் சரித்திரத்தின் சாரமாக விருக்கிறது. சுயஆட்சி உரிமைக் கொடுக்கப்படாததினுல், முன்பிருந்த நோக்கங்கள்—பிரிட்டிஷ் ஆட்சி நன்மை பயக்கக்கூடியது என்பதும், நமது விடுதலைக்காகத் தெய்வ அனுக்கிரகத்தால் மகத்தான சம்பவங்கள் நேரும் என்பதும்—மாறி மூன்ருவதான பகுதியாகிய பிரிட்டிஷ் ஆட்சியின் காலத்திற்கு வருகிறேம். அதுதான் தற்




திரு. புலாபாய்

காலம். இந்தியர்கள் ஆசை சரியானது என்பதைக் காண்பிக்கும் போராட்ட காலம். இதைப்பற்றிய அடிப்படையான காரணங்களை அறிக்கை தயாரித்தவர்கள் ஒத்துக் கொண்டாலும், நான் இனி கூறப் போகும் ஒன்றைக் கவனிக்கவில்லை. அறிக்கையில் 10 பாராவில்,

"நாட்டின், சமய, ஜாதீய, பாஷா வித்தியாசங்களினுல் வரும் சச்சரவுகளை அடக்கி, நியாயமான முறையில் நடக்கக்கூடிய அரசியலை, தேசீய வழிகளில் செலுத்தினேம்" என்றும், இன்னும், "நல்ல அரசாட்சி சுயஆட்சியைவிட மேலானதல்ல, உண்மையான சுயஆட்சி, பொருப்புள்ள தேர்ந்தெடுக்கப்பட்ட சட்டசபையின் மந்திரிகளின் நிர்வாகம் என்பனபோன்ற பிரிட்டிஷ் அரசியல் தத்துவங்களை வளர்த்தது," என்றும் விஸ்தரித்து முடிவாக, "அரசியல் உணர்ச்சியை, அற்பக் கல்வியுடையவர்களான பொதுமக்கள் போக்கிலிருந்து தீர்மானிப்பது பெருந் தவறு என்ற உண்மையைச் சரித்திரம் அடிக்கடி நிரூபித்திருக்கிறதென்றும், பிரிட்டிஷ் சாம்ராஜ்யம் ஏற்பட்டதற்குக் காரணம், அவர்கள் அதை உணர்ந்திருப்பதுதான் என்றும், அரசியல் பயிற்சியுள்ள மக்களின் போக்கை அனுசரிப்பதுதான் சென்ற 150 வருஷ பிரிட்டிஷ் அரசியல் தத்துவம்" என்றும் கூறுகிருர்கள்.

### சமயத்திற்கு இடமில்லை.

இவ்விவாதத்தில் முதல் முதலாக, நான் இப்பொழுது வாசித்ததில் மதமும், ஜாதியும், பாஷையும் மனித வர்க்கத்தில் சச்சரவுகளை உண்டாக்குகிறது. என்று கூறும் கொள்கைகளை மறுக்க விரும்புகிறேன். உலகத்திலுள்ள பெரிய குடியரசுகளின் சரித்திர மெல்லாம் அதற்குமாருக இருக்கிறது. மக்களின் தேசீய உணர்ச்சியை வளர்ப்பது, அவர்களுடைய அரசியல் பொருளாதாரப் பற்றுதல்கள்தான். இதன் உண்மையை உலகத்தில் மிகவும் பெரிய குடியரசான அமெரிக்க அரசியல் விளக்குகிறது. அமெரிக்கப் பொதுமக்கள் ஐரோப்பியாவின் பல வர்க்கத்திலிருந்தும் திரட்டப்பட்டிருப்பினும், அவர்கள் ஒரே நோக்கமுள்ள அரசியலாக உலகத்தின் நன்மதிப்பைப் பெற்றிருக்கிருர்கள். பாஷையைப் பொருத்தவரை அது அரசியல் ஐக்கியத்திற்கு எப்படிப் பாதகமாக இருக்கிறதென்று நான் இனிதான் அறியவேண்டும். சிறு குடியாட்சியான சுவிட்ஜர்லாந்து பார்லிமெண்டில் மூன்று பாஷைகள் பேசப்படுகின்றன. ஜாதீய பாஷா வித்தியாசங்களுக்கும், அரசியல் பொருளாதாரப் பிணிப்புகளுக்கும் சம்பந்தமே கிடையாது என்று நம்புகிறவர்களில் நான் ஒருவன்.

நான், மதமானது மனிதனுக்குக் கடவுளுக்கும் உள்ள சம்பந்தம்; அதை இவ்வுலக விவகாரங்களில் விட்டுக் கலக்கக் கூடாது என்று நம்புகிறவர்.

களில் ஒருவன். மதம், சமூகத்தில் அதன் ஸ்தானத்தை வகிக்க வேண்டும். மனிதனை மனிதன் பிரிப்பதற்கும், அரசியல் ஆட்சி லகுவிற்காக, இந்தியர்களை இந்தியர்களிடமிருந்து பிரிப்பதற்கும், மதம் ஒரு கருவியாக உபயோகிக்கப்பட்டால், இங்கு கூடியிருக்கும் ஒவ்வொரு இந்தியனும், எந்த ஜாதியினுயினும் சரி, எந்த மதத்தினனுயினும் சரி, அதைத் தவறு என்று நிரூபித்து, ஒரு சமயத்தையோ ஒரு மதத்தையோ தழுவியிருப்பதின் காரணமாகத் தன்னை ஒரு கருவியாக உபயோகப்படுத்த அனுமதிக்க மாட்டான் என்று நம்புகிறேன். இந்தக் காரணத்தினுல்தான் காங்கிரஸ் வகுப்புத் தீர்ப்பைப் பற்றி இந்த விதமான நிலைமையை வகித்தது. 30 வருடங்களுக்கு முன்பு என்ன நடந்தது என்பதை மதிக்கிறோம்; அதை உணருகிறோம். இம்மாதிரியான சட்டசபைகளில் மதத்தின் பிரிவுகளுக்குத் தகுந்தபடி வகுப்புவாரியான பிரதிநிதித்வம் கொடுக்கப்பட வேண்டும் என்று கிளர்ச்சி செய்யப்பட்டது. அது ஒரு விஷம்போல் உள்ளூரச் சென்று ஆட்களை மயக்கிவிட்டது. இதனுல் ஒவ்வொரு சமயமும் அரசியல் அமைப்பைப்பற்றி பிரச்னை எழுந்த பொழுது எல்லாம் தனித்தொகுதி என்ற பிரச்னை கிளம்பியது. சிறுபான்மையோருக்குப் பாதுகாப்பு வேண்டும் என்பதைத் தவிர, பொருளாதார அரசியல் விஷயங்களில், ஒரு ஹிந்துவிற்கும், முஸல்மானுக்கும் சீக்கியனுக்கும் என்ன வித்தியாசங்கள் இருக்கப் போகிறது? மத வித்தியாசத்திற்காக, ஹிந்துவின் நிலத்திற்கும், முஸல்மானின் நிலத்திற்கும் பயிர் செழிப்பில் ஏதாவது வித்தியாசம் இருக்கிறதா, அல்லது, மத வித்தியாசத்தினுல், அரசாங்கத்திற்கு அதிகமாகச் செலுத்துகிறோமா? மத வித்தியாசத்தினுல் நாம் சுதந்திரத்திற்கு ஆசைப்படாமல் இருக்கிறோமா? இந்தியரில் ஒரு பகுதியினர்க்காகத்தான் சுதந்திரம் கிடைக்கப் போகிறதா அல்லது அதற்காக நமது தியாகங்கள் குறைந்தது என்று கூறிவிட முடியுமா?

ஆகையால் நான், வகுப்பினுலும் மதத்தினுலும், பாஷையினுலும் வித்தியாசம் இருந்து வருகிறது என்பது தவறுன கொள்கை என்று கூறுகிறேன்.

திருத்தத்தின் அடுத்த பகுதியைப் பற்றி விவாதங்களும் அபிப்பிராய பேதங்களும் ஓய்ந்துவிட்டது என்று நினைக்கிறேன். திரு. ஜின்னுவின் அபிப்பிராயத்திற்கும் எனது அபிப்பிராயத்திற்கும் அதிக வித்தியாசம் கிடையாது என்று அத்திருத்தத்தைப் பிரேரேபித்தவர் விளக்கினுர். அறிக்கையிலும், மசோதாவிலும் கூறப்படும் அரசியல் அமைப்பு நமது பார்வைக்கு வந்திருக்கிறது. மொத்தமாக எல்லாத் திருத்தங்களின் சாரம் இவ்வரசியல் அமைப்பை நிராகரிப்பதுதான். வார்த்தைகளை வைத்து விளையாடலாம்; ஆனுல் அதன் அடிப்படையான அர்த்தம் நிராகரிப்புத்தான்.

நமக்கிடையிலுள்ள அபிப்பிராய வித்யாசங்களைப் பொருத்தவரை, அவை எல்லாம் ஒன்றிற்கொன்று நேர்மாறுனவையல்ல. வித்தியாசங்கள் எல்லாம் சிறிது, குறைந்ததும் உயர்ந்ததுமானதுதான். அவ்வித்தியாசங்கள் அவ்வளவு முக்கியமானதல்ல. ஒவ்வொருவரும் ஒவ்வொரு காரணத்திற்காகக் கொடுக்கப்படும் புதிய அரசியல் அமைப்பு இந்தியப் பொதுமக்களினுல் ஒத்துக்கொள்ளப்படாதது என்று கூறுகிறோம். இதன் காரணத்தை யறிவதற்காக ஒரு கேள்வியைப் போடுகிறேன். அரசாங்கம் ஓர் புதிய அரசியல் அமைப்பை சிருஷ்டிப்பதற்கு அவசியம் என்ன? காரணம், இதுவரை செய்ததை மாற்ற வேண்டும் என்று அடிக்கடி எழும் கிளர்ச்சிகள் என்றுமட்டும் கூறமுடியுமா? இதற்கு ஒரு முக்கியமான, திட்டமான நோக்கம் இருக்கவேண்டும். இம்மாதிரியான மாற்றம் ஏற்படுவதற்கு இரண்டு விதமான நிலைமைகள் தான் காரணமாக விருக்க முடியும். ஒன்று மக்கள் ஒரு நேர்மையான அரசியல் வேண்டுமென்று கிளர்ச்சி செய்வது. இரண்டாவது இருந்துவந்த அரசியலமைப்பு பிரயோஜன மற்றதாக இருப்பது. இவ்விருவித நோக்கங்களைக் கொண்டு கவனித்தாலும், புதிய திருத்தங்களை மேற்கொண்டு செல்வதினுல் பயனில்லை. ஸர் சாமுவேல் ஹோரே, இந்திய மக்கள் ஒவ்வொரு காரணத்திற்காகவும், இப்புதிய அரசியலை வேண்டுகிறுர்கள் இல்லை என்று ஒப்புக்கொள்ளுகிறுர். இத்திருத்தங்கள் அமுலுக்கு வருவது ஒரு சில மக்களின் பெருமையைச் சாந்தி செய்யவா? சைமன் கமிஷனிலிருந்தே எம்மாதிரியான அரசியல் அமைப்பு வேண்டும் என்று ஆராய்ச்சி செய்யப்பட்டு, நான் கூறிய இரண்டு காரணங்களுக்கு ஏற்றதாக இருக்க வேண்டுமென்று முடிவு கட்டப்பட்டது. வேறு வழி யில்லாததினுல் பொது மக்கள் அரசியலை ஒப்புக்கொள்ளுவதினுல் ஏற்படும் ஒற்றுமையினுல் மக்களின் முன்னேற்றத்திற்கு வசதி யிருந்தாலும், அல்லது ஜனங்கள், பிரியத்தையோ அல்லது வெறுப்பையோ கவனியாது அரசாங்கம் இருந்தாலும், இப்புதிய அரசியல் அமைப்பை இன்னும் விவாதிப்பதில் பிரயோஜனமே கிடையாது. இது பொதுமக்களின் அபிப்பிராயம். அது பல வழிகளில் நிரூபிக்கப்பட்டிருக்கிறது. மாகாண சட்டசபைகள் புதிய திருத்தத்தை எதிர்பார்த்து நீடிக்கப்பட்டிருந்தாலும், இந்தியச் சட்டசபை கலைக்கப்பட்டது. புதிய திருத்தத்தைத் தேர்தல் பிரச்னையாக வைத்து நடத்தப்பட்டது. தேசம் தனது ஓர் முகமான தீர்மானத்தை, புதிய திருத்தங்களைப் பற்றி, அதை நிராகரிக்க வேண்டுமென்று வெளியிட்டது, இவை அசைக்க முடியாத உண்மைகள். இதற்கும் அரசியல் அமைப்பிற்கும் சம்பந்தம் கிடையாது.

பிரதிநிதிகளுக்குப் பொறுப்பில்லை

மத்திய பெடரேஷனை முதலர்கக் கவனிப்போம். இதில் சுதேச மன்னர்களின் ஸ்தானத்தைப் பற்றி நான் ஒரு சிறிதும் விவாதிக்கப் போவதில்லை. பத்திரிகைகளும், வதந்திகளும் சுதேச மன்னர்கள் பெடரேஷனின் உபயோகத்தைப்பற்றி அதிகமாகக் கருதவில்லை என்று சொல்லுகின்றன. தங்களுக்கு அதில் நன்மையோ அல்லது தீமையோ இருப்பினும், பிரிட்டிஷ் இந்தியர் அவர்களை சரியான சகபாடிகள் என்று கருதவில்லை என்று நினைக்கிறுர்கள்.

மேலும் அவர்கள் தங்களுடைய கட்டுப்பாடில்லாத ராஜாங்க அமைப்பிற்கும், பிரிட்டிஷ் இந்தியாவின் அரசியல் அமைப்பிற்கும் ஒத்துவாது என்றும், இரண்டும் முரணுனது என்றும் கருதுகிறுர்கள். அது எப்படியிருப்பினும், ஒரு அரசாங்கத்தில் ஐந்து பகுதிகள் இருக்கின்றன. (1) உள்நாட்டு வெளிநாட்டுப் பாதுகாப்பு உரிமை. (2) வெளிநாட்டு சம்பந்தங்களைக் கட்டுப்படுத்த உரிமை. (3) நமது நாணயச் செலவாணி நாணய முறை ஆகியவற்றைக் கட்டுப்படுத்த

(43-ம் பக்கம் பார்க்க.)



# இலக்கியப்பகுதி

## புணர்ச்சி மகிழ்தல்

(ராய. சொ.)

"புணர்ச்சி மகிழ்தல்" என்பது வள்ளுவனுர் காமத்துப்பாலின் மூன்ருவது அதிகாரம். காமத்துப்பால் முதல் அதிகாரம் 'தகையணங் குறுத்தல்' என்பது. தான் காதலித்த பெண்ணின் தகுதியால் தலைவன் தாக்கப்பட்ட நிலைமை அவ்வதிகாரத்தே சொல்லப்பட்டது. இரண்டாவது அதிகாரம் 'குறிப்பறிதல்' அதில் காதலிக்கப்பட்ட தலைவியின் குறிப்பை அறியப்பெற்ற வகை வழுத்தப்பட்டது. குறிப்பை அறிந்தான். தான் காதலிக்கும் அப்பெண் தன்னை நச்சுகின்ருள் என உணர்ந்தான். இருவர் கண்களும் தடையின்றி உறவாடின. இருவரும் கூடி இன்புற்றனர். 'கந்தருவ முறைமையினுல் கடவுளர்க்கும் கிடையாத காமந்துய்த்தார்.' தம் வாழ்நாளில் இதுகாறும் காணுப் புத்தின்பத்தை இருவரும் எய்தினர். இன்பம் இருவருக்கும் ஒருதகைத்தெனினும் பெண்ணியல்பால் போலும் உடனே அப் பூங்கொடி வாய்விட்டு ஒன்றும் கூறி மகிழத் தொடங்கினுளல்லள். ஆனுல் தான் நுகர்ந்த அப் புதிய காதல் இன்பத்தை—அம்மெல்லியல் மாட்டுத் தான் பருகிய இளநலத்தை, எண்ணி எண்ணி மகிழ்கின்ருன் இன்பக் கடலாடினேன். புணர்ச்சியை மகிழ்ந்து கூறும் முறையில் யாக்கப்பட்ட பாக்களைக் கொண்ட அதிகாரமாகலினுலேயே புணர்ச்சி மகிழ்தல் என்னும் பெயர் பெற்றது.

புணர்ச்சி மகிழ்தல் அதிகாரத்தின் முதற் குறள் இவ்வதிகாரத்தின் சிகரம் என்னத் தக்க முறையில் அமைந்து கிடக்கின்றது. சேர்க்கையின் முடிவில் தான் கண்ட இன்பத்தை அப்படியே காட்டுகின்ருன் தலைவன்.

"கண்டு கேட்டு உண்டு உயிர்த்து உற்று
அறியும் ஐம்புலனும்
ஒண்டொடி கண்ணே உள."

இதுவே முதற்குறள். மனிதன் இன்பத்தை அடைதற்கு ஏற்பட்ட வாயில்கள் ஐந்து என்பது அறிஞர் முடிபு. கண், காது, வாய், மூக்கு, உடல் என்ற ஐந்தின் வழியாகவே உலகில் அனைவரும் இன்பம் அடைகின்ருர். இவ் ஐம்புல நுகர்ச்சியும் ஒரே காலத்தில் ஒரே இடத்தில் பெறுவது அரிது. கண்டு, கேட்டு உண்டு, உயிர்த்து, உற்று, அறியும் ஐந்து கருவிகளின் இன்ப நுகர்ச்சியும் மங்கையிடந்தான் இருக்கின்றன; என்று இயம்புகின்ருன் தலைவன். அவள் அழகை—அன்பைப் பருகும் இன்பத்தைக் கண்கள் கொண்டன. அக்குயிலின் இசையை உண்ணும் இன்பத்தைச் செவிகள் ஏற்றன. அப் பணி மொழியாளின் பாலொடு தேன் கலந்தன்ன திருவாய் அமுதத்தை மாந்தி, வாய் இன்பம் பெற்றது. அப் பாவை பூமேனியின் இயற்கை மணத்தையோ செயற்கை வாசனையையோ முகர்ந்து மூக்கு இன்புற்றது. அம் மடமயில் உடலொடு பொருந்தி, யாக்கை பெற்ற இன்பத்துக்கு எல்லையின்று. இப்படியாக ஐவகை யின்பத்தையும் ஒருங்கே பெறவல்ல ஒரு பொருள் உலகத்துண்டு என்ருல் அப் பொருள் பெண்ணே எனத் தலைவன்

வாயிலாக ஆசியர் வள்ளுவனுர் சாற்று கிருர்.

இக் குறளை அப்படியே எடுத்துச் சுவை குன்ருமல் இடமறிந்து தமது பெரிய புராணத்தில் காதல் விளையாட்டில் தேர்ந்த சுந்தா மூர்த்தி காதையில் சமைத்து இன்புற்றிருக்கின்ருர் சேக்கிழா ரடிகள் என்பதை இங்கு குறிப்பிடுதல் பொருந்தும்.

"பண்டுநிகழ் பான்மையினுல்
பசுபதிதன் அருளாலே
வண்டமர்பூங் குழலாளை
மணம்புணர்ந்த வன்ருெண்டர்
புண்டரிகத் தவள்வனப்பைப்
புறங்கண்ட தூநலத்தைக்
கண்டு கேட்டு உண்டு உயிர்த்துஉற்று
அமர்ந்திருந்தார் காதலினுல்"

இப் பாட்டினுள் வள்ளுவனுர் குறள் நன்ருகப் பதிக்கப்பட்டிருத்தல் காணத்தக்கது. அடுத்த குறள்

"பிணிக்கு மருந்து பிறமன் அணியிழை
தன்னேய்க்குத் தானே மருந்து."

நோய்க்கு மருந்து வேறு; அணியிழை தன் நோய்க்கு, அதாவது பெண்ணுல் தாப்பட்ட ஆசை நோய்க்கு அப்பெண் தான் மருந்து. இது நல்ல கருத்தமைந்த பாட்டு. மற்றைய நோயைப் போக்குதற்கு அந்த நோயே மருந்தாக உதவாது; ஆனுல் பெண்ணுல் கொடுக்கப்பட்ட நோயை—அதாவது பெண்ணை அநுபவிக்கவேண்டும் என்ற ஆசை நோயை, அகற்ற வல்ல மருந்து அவளாகவே யிருக்கின்ருள் என்பது இதன் போந்த பொருள். ஒரு நங்கையின் கூட்டுறவு விரும்பி மையல் பிணியை எய்திய ஒருவன், அவள் சேர்க்கையால் அந் நோய் நீக்கம் பெற்றதற்கு வியந்து ஏனை நோய்க்கும் மையற் பிணிக்கும் உள்ள வேறுபாட்டை நினைந்து பாராட்டி மகிழ்கின்ருன்.

"மந்திரம் இல்லை! வேருேர் மருந்தில்லை!
மையல் நோய்க்குச்
சுந்தாக் குமுதச் செவ்வாய் அமுதலால்!
அமுதச் செல்வீர்!"

என்று கம்பர் கூறும் கருத்து இதனேடொத்தது. அடுத்த செய்யுளில் தலைவனது இன்ப நுகர்ச்சிக்கு வைகுந்த லோகமும் ஈடாகாது எனச் சாற்றுகின்ருர் புலவர் பெருமான்.

"தாம் வீழ்வார் மென்ருேள் துயிலின்
இனிது கொல்!
தாமரைக் கண்ணுன் உலகு"

தாம் விரும்பும் மகளிரின் மெல்லிய தோளினிடத்தே துயில் கொள்தல் போன்ற இனிமையுடையதா, செங்கண்மால் உலகம்? அஃதிருக்கட்டும். ஓர் விந்தையான நெருப்பை இவள் வைத்திருக்கின்ருள். தீ தொட்டால் சுடும்; அகன்ருல் விட்டுவிடும். இவளிடத்தே உள்ள தீ நேர்மாருக இருக்கின்றது.

"நீங்கிற் தெறூஉம் குறுகுங்கால்
தண்ணென்னும்
தீ யாண்டுப் பெற்ருள் இவள்?"

இவளை விட்டு நீங்கினுல் சுடுகின்றது; இவளை நெருங்கினுல் குளிர்கின்றது; இத்தகைய தீயை இவள் எங்கிருந்து பெற்றுக்கொண்டாள்?

"வேட்ட பொழுதின் அவையவை
போலுமே
தோட்டார் கதுப்பினுள் தோள்."

மலரணிந்த கூந்தலையுடைய இந்நாரியின் தோள், அநுபவிக்கும் போதெல்லாம், விரும்பிய பொழுதில் விரும்பப்பட்ட அவ்வப்பொருள்கள் கிடைத்தன போன்ற புத்தின்பத்தைத் தருவது போல் இன்பம் செய்கின்றது. மேலும்,

"உறுதோறு உயிர் தளிர்ப்பத்
தீண்டலால் பேதைக்கு
அமிழ்தின் இயன்றன தோள்"

'என்னை அடையும் போதெல்லாம் என் உயிரைத் தளிர்க்கும்படி பொருந்துதலால் இப்பெண்ணுக்குத் தோள்கள் உயிரைச் சாகாது சாக்கவல்ல அமிழ்தம் என்ற உயரிய பொருளினுலேயே செய்யப்பட்டிருத்தல் வேண்டும்.' இவ்வாறு தன்னை இன்புறுத்திய தோள்களைப்பற்றி எண்ணிய அவன், தனது இப் பெண்ணின் சேர்க்கைக்கு நிகாக எதைச் சொல்லலாம் என ஆராய்ந்து துணிகின்ருன். ஒரு அழகிய ஒப்பையும் கண்டு பிடிக்கின்ருன்.

"தம்மில் இருந்து தமது பாத்து
உண்டற்ருல்
அம்மா அரிவை முயக்கு."

'இப் பெண்ணினது சேர்க்கையானது' ஒருவன் தமது வீட்டிலே இருந்து தமது பொருளை—அதாவது தாம் ஈட்டிய பொருளை, கடமையறிந்து வேண்டுமாறு பகுத்துச் செலவிட்டு உண்டு அனுபவிக்கும் நல்லின்பத்தை யொக்கும்' என்பது இப்பாட்டின் போந்த பொருள். இன்பப்பாலிற் புகுந்து இன்பச் சொற்களையும் பொருள்களையும் வாரி வாரி வீசி இளைஞர் உள்ளத்தைக் கொள்ளை கொள்ளும் போாசியரியர், இடையே ஈண்டுப் பொத்தென்று போட்ட நல்லறம் எல்லையற்ற வலிமை பெறுகிறது. தாமரைக் கண்ணன் உலகினும் இல்லையென்று சாற்றிய ஒரு இன்பத்துக்கு, தமது பொருளைப் பகுத்துண்ணும் இன்பம் சமம் என்ற வள்ளுவர் உள்ளக்கிடக்கை சான்ருேரால் தலைமேற் கொள்ளும் தகுதிவாய்ந்த உயர்ந்த கருத் தமைந்தது என்பதில் தடை யென்னே? அடுத்த பாட்டு,

"வீழும் இருவர்க்கு இனிதே
வளியிடை
போழப் படாஅ முயக்கு."

என்பது. விரும்புகின்ற ஆண், பெண் இருவர்க்கும் இனிமை பயப்பது எது? காற்றினுற்கூட இடை யறுக்கப்படாத சேர்க்கையே.

"காதலற் பிரியாமல் கவவுக்கை
ஞெகிழாமல்"

என்று சிலப்பதிகாரத்தில் மணக்காலத்தில் கண்ணகியை வாழ்த்தியதும்,

"சேர்த்தியகை ஞெகிழாமல்
சேர்ந்து சேர்ந்து"

என்று வில்லி பாரதத்தில் சித்திராங்கதை விஜயன் இன்ப வாழ்க்கையைப்பற்றி இயம்பியதும் வள்ளுவனுர் 'வளியிடை போழப்படாஅ முயக்'கை அரண்செய்கின்றன.

ஊடலில்லையேல் புணர்ச்சி பயனின்று என்ற உண்மையை,

"ஊடல் உணர்தல் புணர்தல்
இவை காமம்
கூடியார் என்ற பயன்"

என்னும் பாட்டில் கூறப்படுகிறது. முதலிலே ஊடல்; பிறகு அளவறிந்துணர்தல்; அதன் பின் சேர்தல் இவை தாம் காமமடைந்தார் பெற்ற பயன்கள்; என உணர்கின்ருன் தலைவன். ஊடல்—அல்லது புலவி என்பதை இங்கு விரிக்கிற்பெருகும். அதுபற்றி வள்ளுவர் பின்னே அதிகாரம் வைத்திருக்கின்ருர்; ஆகலின் அங்கு அதனை ஆராயலாம். ஊடல் என்பதற்குச் சிறுசண்டை



எனப் பொருள் கொள்ளலாம். ஊடலின்றேல் கூடல் பயனின்று என்பது வள்ளுவரின் முடிந்த கொள்கை. அதனை ஏனைப்பலரும் உடன்பட்டிருக்கின்ருர். ஆசிரியர் வள்ளுவர் ஊடலை மிக நுணுகி ஆராய்ந்து செல்கின்ருர். அதனை அவ்விடத்து விளக்க எண்ணம். புணர்ச்சி மகிழ்தல் அதிகாரத்தின் கடைசிப்பாட்டு,

"அறிதோறு அறியாமை கண்டற்ருல்
காமம்
செறிதோறும் சேயிழை மாட்டு."

என்பது. சேயிழையாள் இடத்துச் சேரச் சேர இவளுடைய காதலானது, முன்னை அறியாததை அறியும் போது பழய அறியாமையைக் கண்டது போன்றிருக்கின்றது என வியந்து கூறுகின்ருன். இது 'நிறைந்த கருத்துடையது. ஆராய்ச்சி எப்படி முடிவில்லாது செல்லுமோ அத்தகையது இவ்இன்பம்; நாள்தோறும் புதிய இன்பம் காணப்படுகின்றது, என்பதே இதன் கருத்து.

புணர்ச்சி மகிழ்தலை—காதலிபால் தான் பெற்ற இன்பத்தை, நமது வள்ளுவனுர் பெற்ற மகன், இவ்வாறு விரித்தோதித் தான்பெற்ற இன்பத்தை இவ்வையகம் பெறுமாறு செய்கின்ருன். இனி அவன் தனது அருமைக் காதலியின் நலத்தைப் புனைந்து அடுத்த அதிகாரத்தில் உரைக்கப் போகின்ருன்.

---



# இந்திய அரசரின் கடமைகள்

## இந்து சாஸ்திரங்கள் சொல்வதென்ன?

### சர். சிவசாமி ஐயரின் பிரசங்கம்

[சர். பி. எஸ். சிவசாமி ஐயர் அவர்கள் "அரசர், குடிகள் ஆகியோரின் உரிமையும் கடமைகளும்" என்பது பற்றி சென்னை செனட் ஹவுசில் பேசியதின் சாரமாவது]

பண்டைக்கால தர்ம சாஸ்திரங்களின் பிரகாரம், அரசன் குடிகளைப் பாதுகாக்கும் பொருட்டு கடவுளால் படைக்கப்படுகின்ருன். உலகத்தைக் காப்பதற்கு எட்டு திக்பாலகர்கள் அமைந்திருப்பதாகக் கூறுவது மரபு அவர்களின் (அவ் அஷ்டதிக் பாலகரின்) அம்சம் அரசனில் மலிந்திருக்கின்ற தென்பது சித்தாந்தம். எந்த அரசனும் சட்ட திட்டங்கட்கு அப்பாற் பட்டிருந்ததில்லை. எப்போதும் நாட்டின், சட்டங்களைக் காப்பாற்றுவதே கடன் என்று முயன்றிருக்கின்ருன்; என்பதோடு பல்வேறு ஜாதிகளையும் குடும்பங்களையும் காத்து (சிஷ்டபரிபாலனம் செய்து துஷ்ட நிக்ரகம் செய்து) வந்திருக்கின்ருன். ஏழைகள், நோயுற்றவர்கள், பல மற்றவர்கள் முதலியோருக்கு அரசன் ஓர் உற்ற தந்தையாம். அக்காலத்தில் வரிகள் குடிகளின் மனம் புண்படுவதாயிருக்கவில்லை. சாஸ்திரங்கள், தேனிக்கள் மலர்களிலிருந்து எவ்வாறு தேனை எடுக்கின்றனவோ அதேமாதிரி அரசர்கள் குடிகளிடத்திலிருந்து வருத்தமின்றி, மனம் நோகாமல், சிறு துளியாக, வரியை வசூலிக்க வேண்டு மென்கின்றன. அவ்வாறே செய்து வந்தார்கள் பூர்விக அரசர்கள். ஏதேனும் முக்கியமான பிரச்சினைகளைப்பற்றி யோசிக்க வேண்டியதாக விருந்தால் அரசர் குடிகள் எல்லோரையும் ஒருங்கு திரட்டி அவர்களுடைய அபிப்பிராயத்தைக் கேட்டிருக்கின்ருர்கள். தசரதன் ஸ்ரீராமனுக்குப்பட்டம் சூட்ட நினைத்தபோது அவ்வாறுதான் செய்தான் என்று ராமாயணம் சொல்கின்றது. தேசத்தின் வரி வசூல் முழுதும் அரசனின் இன்பங்கட்கே செலவழிக்கப்பட்டதில்லை. எவ்வளவு வரி வந்ததோ அத்தனையும் தேசத்தின் — குடிகளின் — மாட்டே செலவிடப்பட்டது. எந்த அரசனேனும் குடிகளை ஒழுங்காக அரசாளவில்லையானுல் அவன், தெருவில் போகும் 'பேய்' நாயைப் போல, குடி ஜனங்களால் கொல்லப்படலாம். பஞ்சங்கள் முதலிய உத்பாதங்கட்கு அரசனே பொறுப்பாளி என்று கொள்ளப்பட்டது. சிலகால் அகால மரணங்கட்கும் அரசனின் தீச்செயல்களே காரணம் என்று நம்பப்பட்டு வந்தது.

இவ்வாறு அரசன் நாட்டின் பலவித நலன்களுக்குப் பாத்திரவானுயிருந்ததோடு, சர்க்கார் உத்யோகஸ்தர்களைத் தேர்ந்தெடுப்பதில் அளவிலா கவனமும் காண்பித்திருக்கின்ருன். அச் சர்க்கார் உத்தியோகஸ்தர்களிலும் மந்திரியைத் தேடி எடுப்பதில் காண்பித்த கவனம் அளவிட முடியாததாம். மந்திரி அரச விஸ்வாசமுடையவனுகவும், நாட்டுப் பற்றுக் கொண்டவனுகவும், நீதி நெறி தவருதவனுகவும், குடிகளைக் குழந்தைகள் போல் பார்ப்பவனுகவும், புத்திசாலியாகவும் இருத்தல் வேண்டும். சுருங்கச் சொன்னுல் அரசனின் ஒரு வலக்கரமாகவும் தர்மத்தின் மூர்த்திகாரமாகவும் இருத்தல் வேண்டும் மந்திரி. மந்திரியின் பிரதான வேலை, கிராமாதிகாரிகள் ஒழுங்காகத் தம் குடிகளை அரசாளுகின்ருர்களா வென்று பார்ப்பதும் லஞ்சம் முதலியன வாங்காமல் நியாயம் வழங்கப் படுகின்றதாவென்று ஆராய்வதுமாகும்.

அரசனுக்குக் கீழ் ஏராளமான ஒற்றர்கள் இருந்தனர். அவர்கள் நாட்டுக்கு நாடு, ஊருக்கு ஊர், இரகசியமாகச் சென்று, குற்றங் குறைகளின் அந்தரங்கங்களையும் ஜனங்களின் தேவைகளையும் பிறவற்றையும் கண்டு வந்து அரசனுக்குச் சொன்னுர்கள். அரசன் குற்றங்

களைக் கண்டுபிடிப்பதற்காகச் சிலகால் கெட்ட மனிதர்களைத் தூண்டிவிட்டுத் தீமை செய்யச் சொல்லி, மற்றவர்களின் நிலைமையைப் பார்த்து வந்தான். சில கால் உளவறிதற்காக, தேவதாசிகளும் உபயோகப் படுத்தப்பட்டு வந்தனர். விபசாரம், ஒரு தனி உத்தியோகஸ்தரால் அடக்கி ஆளப்பட்டது. சூதாட்டம் முதலியவைகளும் சட்டதிட்டங்களின் கீழ்க் கொண்டுவரப்பட்டன. சில சமயம் சூதாடு விடுதி வைத்திருப்போர் அடையும் லாபத்தின் ஒரு பகுதியை அரசன் திறையாகப் பெறுவதின் மூலம் அத்தீயதொழிலைத் தடைசெய்து வந்தான். கலால் இலாகாவில் அதிகமான சட்டதிட்டங்களை நிறுவி மது பானங்கள் தயாரிப்பது ஓரளவுக்குத் தடை செய்யப்பட்டு வந்தது. நாடு பிடிக்கும் யுத்தங்கள் ஒழிக்கப்படவில்லை. ஒரு அரசன் தன் தேயத்தைப் பெரிதாக்கும் பொருட்டுப் போர் தொடுப்பது நியாயமான காரியமென்று அக்காலத்தில் எண்ணப்பட்டு வந்தது.

மற்போர், யுத்தம், மகா யுத்தம் முதலியவற்றிற் கெல்லாம் தர்ம சாஸ்திரப்படி சில வரம்புகளும் நியாயங்களும் முறைகளும் கற்பிக்கப்பட்டு வந்தன. சாதாரணமான இருவர் போரில் கட்சிக்காரர்கள் அதிகமாக எதிரியின் சௌகரியங்களைக் கவனித்து வந்தனர். வெளிப்படையான யுத்தங்களில் எந்த அரசனும் மறைத்து வைத்திருக்கும் ஆயுதங்களால் போர் புரியவோ, அல்லது கருக்குள்ள படைகளாலோ, விஷம் தோய்ந்த கருவிகளாலோ அமர்புரியவோ, அல்லது நெருப்புக் கக்கும் ஆயுதங்களால் சமர் நடத்தவோ செய்யலாகாது. அதே மாதிரி புரவியில்லாத ஒருவனுடனே, வணங்கும் கையுடைய ஒருவனுடனே, உட்கார்ந்திருப்பவனுடனே, தூங்குபவனுடனே அல்லது ஆயுதத்தை இழந்திருப்பவன், நிர்வாணமானவன், முறிந்துபட்ட ஆயுதமுடையவன், கடுமையான காயம் பட்டவன், அன்றி போர்க்களத்திலிருந்து ஓடிக் கொண்டிருப்பவன் முதலியவருடனே யுத்தம் நடத்தக்கூடாது. தர்ம நியாயமான போர் ஒரு க்ஷத்திரியனின் கடமையென்றும், அதில் மரணமடைவது பாராட்டத் தகுந்த செயல் என்றும் கருதப்பட்டு வந்தது. காயமடைந்த எதிரியைச் சிகிச்சைசெய்து குணப்படுத்தி விடுதலையளிக்க வேண்டும்; இன்றேல் உடன் அவனது வீட்டுக்கு அனுப்பிவிட வேண்டும். சுருங்கச் சொன்னால் நம் பூர்வீகர்கள் யுத்தங்களில் காண்பித்து வந்த நீதிமுறைகள் உலகில் எந்த நாட்டினராலும், எந்தக் காலத்தும், எந்த ஒழுக்கத்திலும் காண்பிக்கப்பட்டு வந்ததில்லை. இந்தியாவின் பெரும் பெருமைக்கு இவ் யுத்த ஒழுங்கொன்றே என்றென்றும் போதுமானதாகும்.

நம் பூர்வீகர்கள் அஹிம்சைக்கு (ஜீவ காருண்யத்துக்கு) வைத்த மதிப்பு அபரிமிதம். உலகில் காண்கின்ற சகல ஜீவராசிகளிடத்திலும் — ஒரு புழுவினிடத்திலும்கூட—அன்பு காண்பிப்பது இந்து மதத்தின் முக்கியமான தத்துவமாகும். பிராமணர்கள் ஜீவகாருண்ய முறைகளைப் பௌத்தர்களிடமிருந்து பெற்றுக்கொண்டார்கள் என்று கூறுவது தவறாகும். புத்தர் அஹிம்சா தர்மத்தைப் போதிக்கவில்லை. பிராமணர்கள் வேள்விகட்காக மட்டிலும் ஜீவிகளைக் கொல்லலாம் என்று கருதி வந்திருந்ததைக் கண்டித்து "வேள்வியாகாது" என்று மட்டிலுந்தான் கூறினார். புத்தர் அன்புடைமையை வற்புறுத்தினரென்றாலும் அவரோ அவரது சிஷ்யர்களோ மாமிசம் அருந்துவதிலிருந்து விலகவில்லை. அதேமாதிரி பண்டை இந்துக்களும் புலாலுணவை விட்டு நீங்கியவர்களல்லர். பிராமணர்கள் கூடவும் பண்டை நாளில் மாமிசம் அருந்தி வந்தார்கள். யாகத்திற்காகப் பிராணி இம்சை செய்வதைப் பூர்வீகர்கள் குற்றமென்று கருதியதாகத் தெரியவில்லை. கொடுமை செய்யும் நோக்கத்தோடு கொலை செய்வதே பாவம் என்பது அவர்கள் துணிபு.

சுத்தமுடைமையைப் பற்றிக் கவனித்தால் இந்துமதம் மிக மிக உச்சஸ்தானத்தில் வாகிற்கும். உலகில் எந்த மதமும் பரிசுத்த முடைமையை (இந்து மதத்தைப்போல்) அவ்வளவு அதிகமாக வற்புறுத்தவில்லை. சிலகால் பரிசுத்த வாழ்வு உயர்வு நவிர்ச்சியாகக் கூட சொல்லப்பட்டு வந்திருக்கிறது. சுத்தமுடைமையில் உடற்சுத்தம் மட்டிலுமிருந்தால் போதாது. மனச்சுத்தமே எல்லாவற்றிற்கும் அடிப்படை. கௌதமன் அடக்கம், பொறுமை, அன்பு, கோபமின்மை, ஆசையின்மை முதலியவற்றிலிருந்து விடுபட்டவர் பிராமணனாக முடியாது என்கின்றார். ஆஸ்தி பரிசுத்தமான வழிகளில் அதாவது மனச்சுத்தத்துடனும் கைச் சுத்தத்துடனும் ஈட்டப்பட வேண்டும்.

மற்றும், பண்டைக்காலத்தில் நாம் காணும் பொதுவிதி, மிலேச்சர்கள் பாஷையைப் பயிலக்கூடாதென்பதும், அநாகரிகர்கள் மொழிகளைக் கற்கக் கூடாதென்பதும், மாக்கலமேறிச் செல்லலாகாதென்பதுமாம்.

குற்றவாளிகள் அக்காலத்தில் அரசனால் தண்டிக்கப் பட்டார்கள். தவமும் ஒருவிதமான தண்டனையே. மக்கள் தாம் செய்யும் தவறுகளிலிருந்து தப்பும் வழி கிடைப்பதற்காகத் தவமிருந்து மோக்ஷலோகப் பிராப்தியை எதிர்பார்த்தார்கள்.

[மேற் குறிப்பிட்ட பூர்வீக மக்களின் ஒழுக்கம் பெரும்பான்மையும் ஆரியர்களைப் பொறுத்ததாம். திராவிடர்கள் ஆரியர்களைவிட மிக நாகரிகமும் தருமசிந்தையும் பெற்றிருந்தார்கள் என்று தெரிகிறது. வேள்வியின் பெயராலெனினும் பிராணிகளைத் திராவிடர் வதைத்ததில்லை. அன்பே திராவிட மதத்தின் அடிப்படை, ஆணிவேர், கோட்பாடு. ஜாதிபேதம், வகுப்பு வேற்றுமை என்பவை திராவிட மக்களிடையே இருந்ததில்லை. அரசன் ஜாதி தர்மத்தைக் காப்பதற்காகப் படைக்கப்பட்டான் என்று திராவிடர் (தமிழர்) எண்ணியதில்லை. மிலேச்சர் பாஷையைக் கற்கலாகாதென்று தமிழர் நினைத்ததற்கு ஆதாரம் கூறமுடியாது. மாக்கலம் ஏறுவதையும் தடை செய்தாரல்லர். சாவகம், புஷ்பகம், மணிபல்லவம் முதலிய மிக எட்டிய நாடுகட்கும், கிரேக்க தேசம், எகிப்து தேசம், உரோம சாம்ராஜ்யம் முதலிய விடங்கட்கும் தமிழர் சென்று வியாபாரம் நடத்தியதோடு உறவு பூண்டும் வந்திருக்கின்றார்கள். நியாயம் வழங்குதலிலும், வீரம் காண்பிப்பதிலும், அரசாளுவதிலும் தமிழர் ஆரியர்களைவிட முன் போனவர்கள் என்று சொல்லலாம்.]

---





# பர்மா செட்டியார்களுக்கு அநீதி

—(o)—

## தூது செல்வதின் உட்கருத்து.

கனம் ராஜா சர் அண்ணுமலைச் செட்டியார் அவர்கள் இங்கிலாந்து செல்வதற்காகச் சனிக்கிழமை யன்று சென்னையிலிருந்து பம்பாய்க்குப் புறப்பட்டார். அவர் நகரத்தார்கள் (செட்டியார்கள்) சார்பாக இந்தியா மந்திரியிடமும், குடியேற்றநாட்டு மந்திரியிடமும் செல்லும் தூதுக் கோஷ்டிக்குத் தலைமை தாங்குவார்.

ராஜா சர் ருடன் செட்டிநாடு ராணியும், புதல்வராகிய திரு. ராமநாதன் செட்டியாரும் சென்றுள்ளார்கள்.

ராஜாவைப் பேட்டி கண்டபோது கூறியதாவது:—

"தூதுக் கோஷ்டியின் நோக்கம் கூட்டுக்கமிட்டி அறிக்கையில் காணப்படும் பர்மா இந்தியர் நிலைமையை சீர்திருத்துவதும், இதுகாறும் நாங்கள் பர்மாவில் அடைந்து வந்த உரிமைகளை இன்னும் (பிரிக்கப்பட்ட பர்மாவிலும்) அடையும்படியான வசதிகளைப் பெறுவதுமாகும்.

"பர்மாவில் 10 லட்சம் இந்தியர்கட்கு மேல் இருக்கிறார்கள். அவர்கள் அந்நாட்டில் போட்டிருக்கும் பணமும், அந்நாட்டின் முன்னேற்றத் திற்காய்ச் செய்திருக்கும் தொண்டும் அபாரமாகும். பர்மாவின் உத்தாரணத்திற்குச் செட்டியார்கள் உழைத்தது மிக. அதனை சர் ஹார்க்கோர்ட் பட்லர் (மாஜி பர்மா கவர்னர்) போன்ற பல ஆங்கில உத்யோகஸ்தர்களே புகழ்ந்திருக்கின்றார்கள். பெரும் காடாய்க் கிடந்த லக்ஷக்கணக்கான ஏக்கர் (நிலங்கள்) இன்று புன்னகை தூவும் பசும்பயிர் நிறைந்த வயல்களா யிருப்பதற்குச் செட்டியார்கள் பண ஒத்தாசையே காரணம். சுமார் 80 கோடி ரூபாயைச் செட்டியார்கள் பர்மாவில் பரப்பி யிருக்கிறார்கள். அன்றி வருடாவருடம், நிலவரி, வருமான வரி, இதர வரிகள் என்னும் வகையில் சுமார் ஒரு கோடி ரூபாயைச் சர்க்காருக்குச் செலுத்தி வருகிறார்கள்.

மேற்குறித்தவாறு இவ்வளவு தாராளமாகச் செட்டியார்கள் பணம் போட்டதின் கருத்து தமக்கு எவ்விதக் கெடுதியும் ஏற்படாது என்றுதான்.

மாமூல் வியாபார தோரணையின் கீழ் நிலங்கள் அவர்கள் வசம் வந்தன. இன்று அவர்களுடைய இஷ்டமில்லாமலே அவர்கள் நிலச்சுவான்தார்களா யிருக்கிறார்கள். அதற்கு அவர்கள் ஜவாப்தாரிகளல்ல. எந்த லேவாதேவிக்காரனும் தனது ரொக்கப் பணத்தை நிலங்களில் முடக்கி வைத்திருக்க விரும்பமாட்டான். ஆனல் இன்று செட்டியார்கள் அம்மாதிரி துரதிர்ஷ்டமான நிலைமையில்தான் இருக்கிறார்கள்.

"இன்று செட்டியார்கள் நிலத்தை விழுங்கும் போசை கொண்டிருக்கின்றார்கள் என்று கூ. க. அறிக்கை சொல்கிறது. இது அநீதமாகும். எந்தச் செட்டியாருக்கும் நில ஆசையில்லை. செட்டியார்களின் மூலதனத்தில் கடன் வாங்கிய பணமும் ஏராளமுண்டு. அக்கடன்களை அவர்கள் கொடுக்கும் ஆற்றல் பெறுவது, அவர்களது பர்மிய வாடிக்கைக்காரர்கள் கடனைத் தீர்க்க முன்வரும் ஆற்றலைப் பொறுத்திருக்கிறது. எனவே கூ. க. அறிக்கைப்படிக் குழப்பம் ஏற்பட்டால் கடன் தொழிலில் பெரிய குழப்ப மேற்படும்.

"ஆகவே சட்ட பூர்வமாக எங்கள் உரிமைகள், பிரிக்கப்பட்ட பர்மாவில் காக்கப்பட வேண்டும். எனக்கு ஆங்கிலேயர்களின் நியாய உணர்ச்சியில் மிகுந்த நம்பிக்கையுண்டு. பெரும்பான்மையும் பர்மாவிலிருக்கும் எங்கள் நிலைமை சரியாக இந்தியா மந்திரி முன்பும் கூட்டுக்கமிட்டி முன்பும் தெரிவிக்கப்படவில்லை. அக்குறையை நாங்கள் பரிஹரிப்போம்.

"எங்கள் தூதுக்கோஷ்டிக்கு மே. த. வைசிராய், எர்ஸ்கின் பிரபு ஆகியோரின் அனுதாபமும் ஆசீர்வாதமுமுண்டு."

சென்ற வாரம் வியாழக்கிழமை பம்பாய் சௌபாத்திக் கடற்கரையில் கூ. க. அறிக்கைக் கண்டனக் கூட்டமொன்று நடைபெற்றது. அதில் ஸ்ரீ நரிமான் பேசினர். —Cou.

---

தேசாபிமானமற்ற கல்வி அதன் பெயருக்கே இழிவு செய்வதாகும்.

—பண்டித மாளவ்யா.



சிறுவர் பகுதி

# அலையும் அஞ்சுமோ அரசனுக்கு ?

("பாப்பா")

சில நூறு ஆண்டுகட்கு முன்பு இங்கிலாந்தில் கன்யூட் என்ற ஓர் அரசனிருந்து வந்தான். அவன் வீரமும் ஒழுங்கும் உடையவன். மன்னனைப் பிறந்தவர்கள் தம் குடிகள் இன்பமெய்த ஆளுவதே கடமை என்பது அவனது கொள்கை. இவ்வாறு நீதியாக ஆண்டுவந்ததால் குடிஜனங்கள் பலவாறு புகழ்ந்தார்கள்.

இத்தருணம் நோக்கி சில தந்நலமிகள் அரசன் வீரப்பிரதாபங்களைப் புகழ்ந்து நன்மையடைய நினைத்தனர். ஒருநாள் கன்யூட் முன் நின்று அவனை ஸ்தோத்திரம் செய்து "உன் கீர்த்தி அளவிட முடியாதது. உலகமெல்லாம் உன் நாமத்தில் மகிழ்ச்சி கொள்கின்றது. எந்த நல்ல மனிதனின் இருதயமும் உன்னை நினைக்கும்போது விகாசமடையும். எந்தக் கெட்ட மனிதனும் உன் பெயரைக் கேட்ட அளவில் பயம் கொள்கின்றான். கடலலைகள் கூடவும் உன்னைக் கண்டால் அஞ்சியோடும்" என்று புகழத் தொடங்கினர்கள்.

கன்யூட் மன்னனல் எதைப் பொறுக்க முடிந்தாலும் தற்புகழ்ச்சியைப் பொறுக்க முடியாது. உண்மையில் தற்புகழ்ச்சி ஓர் மகாக் கொடிய விஷமாகும். தற்புகழ்ச்சிக்குச் செவி சாய்ப்பவர்கள் நியாயம் குறைந்து தர்மம் மறந்து போவார்கள். ஒரு மனிதனின் வளர்ச்சி தற்புகழ்ச்சி யென்னும் கோடரியால் வெட்டி வீழ்த்தப்படும். எவன், தான் புகழப்படுவதை விரும்புவானே அவன் தன் மீதிருக்கும் குற்றம் யாது என்று தெரிந்து கொள்ள முடியாதவனகி, தன் செயல் வழியே நிற்கத்தொடங்கி, நாளடைவில் சீர்திருத்தமில்லாது கெட்டு அழிந்து போய்விடுவான்.

கன்யூட் முகஸ்துதியை (தற்புகழ்ச்சியை) வெறுக்கத் தொடங்கியதும் தன்னைப் புகழ்வாருக்கு ஒரு பாடம் கற்பிக்க நினைத்து ஒரு தந்திரம் செய்தான். ஒரு நாள் மாலையில் கடற்கரைக்குச் செல்வதாய்ச் சொன்னன். ராஜ கட்டளையை மறுப்பார்களா? உடன் சாயுங்காலம் ஐந்துமணிக்குப் பரிவாரங்கள் நிருபனைச் சூழ்ந்து கடற்கரைக்குச் சென்றார்கள். அங்கு குதித்து விளையாடிக் கரையில் அடிக்கும் அலைகளின் சமீபம் ஒரு நாற்காலியைப் போடச் சொன்னன். அப்படியே நாற்காலியொன்று போடப்பட்டதும், கன்யூட் அதில் உட்கார்ந்தான். பின் முகஸ்துதி செய்வோரை அருகில் அழைத்தான். அவர்களிடம். "என்னைக் கண்டால் கடலலை பயப்படும் என்றீர்களே; இதோ சோதிக்கிறேன்; பாருங்கள்." என்று சொல்லிவிட்டு கடலை, நோக்கி, "அலையே! என் காலைத் தொடாதே; நீங்கிநில்" என்றான். மனிதன் புலம்புவதற்குக் கடல் செவி சாய்க்குமா? அது வழக்கம்போல் ஓங்கி அறைந்தது. அரசன் பாதமும் அன்றி நாற்காலியும் நனைந்தன. இதனைக் கண்டதும், முகஸ்துதியாளர் வெட்கித் தலை குனிந்தனர். அரசன் "தோழர்களே! நீங்கள் எவ்வளவு பொய்சொல்லி என்னை ஏமாற்றினீர்கள் தெரிகிறதா?" என்றான். அவர்கள் தலைநிமிரவேயில்லை.

ஆகவே சகோதரர்களே! தற்புகழ்ச்சியை விரும்பாதீர்கள். அது ஒரு கெட்டகுணம். எவன் புகழ்கின்றானே அவன் உங்களிடமிருந்து எதையோ அடைய விரும்புகின்றானென்று தெரிந்து கொள்ளுங்கள்.



# விகடத்திரள்

மாணுக்கன் :—என்னுடைய சர்ட்டிபிகேட்டைக் கொடுங்கள்.

வாத்தியார் :—ஏன்? வேலைக்குப் போகப் போகிருயா?

மாணுக்கன் :—இல்லை, நான் ஒரு கலியாண விளம்பரத்திற்கு பதில் எழுதப் போகிறேன்.

—கே. சடகோபன்.

* * *

ராமு :—பத்து வாழைப்பழத்தை கமலாவுக்கும், லீலாவிற்கும் பங்கிட்டால் ஒவ்வொருவருக்கும் என்ன வரும்.

கோமு :—ஒவ்வொருவருக்கும் குளிரும் ஜுரமும் வரும்.

—கே. எஸ்.

* * *



நண்பர் :—அந்த வீட்டிற்காக வழக்கு நடத்தினீரே! அது உமக்குச் சொந்தமாகி விட்டதா?

நான் :—ஆம்' என் வக்கீலுக்குச் சொந்தமாகியிருக்கிறது.

—எஸ். வாசன்.

பிரசங்கி :—உலகத்தில் மனிதன் உயர்ந்த ஸ்தானத்தை அடைவதற்கு ஒரே ஒரு வழிதான். அது............

கூட்டத்திலொருவர் :—அது ஏணி மேலேறிச் செல்வதாகும்.

—என். பி. வி. நாதன்.

* * *



எஜமானன்:—ஏண்டா! இன்று பால் தண்ணீராக இருக்கிறதே?

பாற்காரன் :—அது—சாமி இன்னிக்கு—மாடுமேலே மழை பெய்துதுங்க.

—வெங்கடாஜலம்.

* * *

நண்பன் :—உன்னை எப்பொழுது எழுப்பவேண்டும்?

நான் :—ஆறு மணிக்கு.

நண்பன் :–சரி; என்னை 5½ மணிக்கே எழுப்பி விட்டுவிடு.

—அலர்மேல்மங்கை.

உபாத்தியாயர் மாணவர்களைப் பார்த்து, "உலகில் எல்லோரும் சரி சமானமாக வாழவேண்டும்" என்ருர்.

உடன் ஒரு மாணவன் :—அப்படியானல் நீங்கள் கொஞ்சநேரம் புஸ்தகத்தைப் படியுங்கள். நாங்கள் உங்களை மிரட்டிப் பாடம் கேட்கிருேம் சார்.

—டி. என். வி. கோபால்.

* * *



வீட்டுக்காரர் :—சாஸ்திரிகளே! என் மருமகளுக்கு வருகிற வாரத்தில் கலியாணம். நீங்கள் கலியாணத்தை நடத்த என்ன தட்சிணைக் கேட்கிறீர்கள்?

சாஸ்திரிகள் :—30 ரூபாய் கொடுங்கள்.

வீட்டுக்காரர் :—என் தாயார் கருமாதிக்கே 20 ரூபாய்தானே வாங்கினீர்கள்?

சாஸ்திரிகள் :—அதற்கு வேறு, இதற்கு வேறு மந்திரம், அல்லவா?

வீட்டுக்காரர் :—பரவாயில்லை. ரூபாய் இருபது பெற்றுக்கொண்டு தாயார் கருமாதிக்குச் செய்த மந்திரத்தையே உபயோகப் படுத்துங்கள். என்ன முழுகிவிடப் போகிறது?

—கே. பி. சாரதி.

* * *

முருகன் :—ஏண்டா சுப்பா 100 ரூபாய் சம்பளம் வாங்குகிறவர்கள் சீட்டுப் போடலாம்; 100 ரூபாய் வாங்குகிறவர்கள் சீட்டுப் போடக்கூடாதென்கின்ருர்களே; ஏன்?

சுப்பன் :—100 ரூபாய் சம்பளம் வாங்குகிறவர்கள் சீட்டுப் போட்டால் தாராளமாகப் பந்தயம் வைக்க முடியாதல்லவா?

—இ. எஸ். பி.



# காந்தி திருப்பள்ளியெழுச்சி

ராய. சோ.

—(உரிமை ஆக்கியோனுடையது)—

பாயிரம்

கலங்காத திருவுளத்துக் காந்திக்குத் திருப்பள்ளியெழுச்சி கண்டான்
அலங்காரம் ஆங்கலியை யாயிரத்து முப்பத்து நான்காம் ஆண்டில்
இலங்கும்ஆங் கீரசவில் எழிலானி பதினேழா இசைந்த நாளில்
மலிந்தபுகழ் தருவேலூர்ச் சிறையதனில் ராயசொக்க லிங்கன் மாதோ.

திருப்பள்ளியெழுச்சி

விரிகதிர் பாப்பி இரவியும் எழுந்தான்!
வியனிலம் இருள்கெட வெளுத்தது கீழ்பால்!
அருஞ்சிறைக் கதவம் திறக்கநின் னடியார்
அறையினின் றெழுந்துவந் தடிபணி கின்ருர்!
பெருமிதத் அன்னை விடுதலை விரைவில்
பெறுவதற் குன்மேல் விழிநிறைக் கின்ருள்!
ஒருதனி வள்ளால்! ஒண்டவ காந்தி!
உயிர்க்குயி ரே!பள்ளி யெழுந்தரு ளாயே! (1)

கோழிகள் கூவின! கொழுநகை முல்லைக்
கொடிகள் மலர்ந்தன! படிபுகழ் உழவர்
மேழிகள் ஏந்தினர்! மேதினி வாழ
மேன்மை அறம்பொருள் மேலவர் விண்டார்!
ஏழிசை யோடின்ப யாழ்குழல் இணைத்தே
ஏந்தெழில் மாதர் இயம்பினர் கீதம்!
வாழிகள் பாடினர் வந்தியர்! காந்தி
மாதவ னே!பள்ளி யெழுந்தரு ளாயே! (2)

விடிந்தது பொழுது! விளங்கிய துலகம்!
விட்டனர் உறக்கம்! தொட்டனர் தொண்டு!
மடிந்தது மடமை! வாழ்ந்தது நாடு!
மண்டினர் உரிமை மாபெரும் போரில்!
இடிந்தது காரிருள்! இரிந்தனர் மாற்ருர்!
எழுந்தனன் விடுதலைப் பரிதியவ் வானில்!
முடிந்தது பகைமை! உயர்ந்தனள் நந்தாய்!
மோகன னே!பள்ளி யெழுந்தரு ளாயே! (3)

ஆடின மயில்கள்! கூவின குயில்கள்!
ஆர்த்தின பறவை! அலர்ந்தன மலர்கள்!
மாடமும் மறுகும் வயங்கின ஓசை!
மாதரும் மைந்தரும் மொய்த்தனர் யாண்டும்!
கோடுயர் உதய மால்வரை யதனில்
கொழுங்கதிர் நிறைத்தே எழுந்தனன் பகலோன்!
பாடினர் புலவோர் நின்புகழ்! காந்திப்
பண்ணவ னே!பள்ளி யெழுந்தரு ளாயே! (4)

இளங்கதிர் ஞாயிறு எழுந்தது கிழக்கில்!
எழுந்தது சுதந்தரப் பெருமுழக் கெங்கும்!
விளங்கொளி மேனிநம் மேதகு நற்ருய்
விழைந்தனள் பண்டைப் பெறலரும் வாழ்வை!
உளங்களி கூர்ந்தவள் உயர்நின் னடியார்
உன்னரும் பணிதலை பார்த்துநிற் கின்ருர்!
வளங்கெழு நாட்டை வாழ்வித் தருள
வந்தவ னே!பள்ளி யெழுந்தரு ளாயே! (5)

பூரண சுதந்தரப் பேரிகை முழங்குது
பூமியும் வானமும் திசைகளும் குலுங்க!
மாரத அறப்போர் வீரர்க ளான
மைந்தரும் மாதரும் வல்லணி வகுத்தே
ஆரஞர் உற்ற பாரத அன்னை
அருந்தளை தகர்க்க அமர்க்களஞ் சேர்ந்தார்!
போரதிற் றலைமை பூண்டருள் காந்திப்
புண்ணிய னே!பள்ளி யெழுந்தரு ளாயே! (6)

நின்புகழ் பாடிநின் றேத்தினர் ஒருபால்!
நினதருள் வாய்மொழி நோக்கினர் ஒருபால்!
அன்புரு வாநின் ருடினர் ஒருபால்!
அடிமை தொலைக்கவந் தடைந்தனர் ஒருபால்!
மன்பதை காப்போர் மாசு துடைக்க
வன்கொடுஞ் சிறையுள் வதிந்தனர் ஒருபால்!
என்பொடிந் திடவடி பட்டனர் ஒருபால்!
எம்பெரு மான்!பள்ளி யெழுந்தரு ளாயே! (7)

வாழ்ந்தது நல்லறம்! வாழ்ந்தது நாடு!
வாழ்ந்தனர் மேலோர்! வாழ்ந்தனம் யாமும்!
வீழ்ந்தது தீமை! வீழ்ந்தபேர் ஆசை!
வீழ்ந்தனர் கீழோர்! வீழ்ந்தனர்! வீழ்ந்தா!
ஆழ்ந்தநின் எண்ணம் அனைத்துமே கூடி
அவனிசீர் பெறும்நாள் அணைந்ததால் ஐய!
தாழ்ந்தவர் உயரத் தரணியில் வந்த
தண்ணளி யே!பள்ளி யெழுந்தரு ளாயே! (8)

கருணையின் கடலே! பெருங்குணக் குன்றே!
கதிர்நிகர் ஒளியே! பெருமித முனியே!
தரைபொரு பொறையே! சபர்மதி வாழ்வே!
சத்திய நெறியே! உத்தமர் ஏறே!
வருமடி யோமின் கண்ணே! மணியே!
மணியுரை பாவாய்! மாநில விளக்கே!
அருமையில் உயர்வொப் பொருவரும் இல்லாய்!
ஆருயி ரே!பள்ளி யெழுந்தரு ளாயே! (9)

பொய்கை மலர்ந்தன! மலர்ந்தன சோலை!
புள்ளினம் அலம்பின! அலம்பின சங்கம்!
பெய்மது உண்டிசை பாடின வண்டு!
பேசின நின்புகழ் பூவையும் கிளியும்
வெய்யவன் தன்னிளம் செங்கதிர் நுழைத்து
விரிமலர்ச் சோலையின் இடைபுகு கின்ருன்!
தையலர் மாமலர் கொய்வதற் குற்ருர்!
சபர்மதி யோய்!பள்ளி யெழுந்தரு ளாயே! (10)

சரித்திரக் கதை

# மணிபுரத்தின் மாயம்

(எஸ். கே. எஸ்.)

உக்கிரசிங்கன் என்னும் இராஜ புத்திர சிற்றரசன் சுயேச்சையாக மணிபுரத்தை ஆண்டு வந்தான். நாட்டு மக்கள் சுபிக்ஷமாக வாழ்ந்து வந்தார்கள். அவ்வரசனின் போர்த் திறமையைக் கண்டு, ஔரங்கசீப் தமது சேனாதிபதியாக இருக்கும்படி பல தடவை வேண்டியும் மறுத்தான்; ஆகையால் இருவருக்கு மிடையே பகைமை ஏற்பட்டது.

அவ்வரசனோடு போர் தொடுக்க சக்கிரவர்த்தியால் சேனை தயாரிக்கப் பட்டது. பிரதம படைத் தலைவனாகிய தாவுத் அப்துல் கானின் உதவிக்காகப் பிரதாப சந்திரன் என்னும் இராஜபுத்திர வீரனை ஔரங்கஸீப் அனுப்ப எண்ணி, அவ்வீரனை அழைத்து இவ்வாறு கூறினார்:—

"உங்களை தங்களின் மனதுக் கொவ்வாத காரியத்திற்கு அனுப்புகிறேன் என்று ஒருக்கால் நினைக்கலாம். இராஜ புத்திரர்கள் கடமையை நிறைவேற்றுவதில் அணுவளவேனும் பின் வாங்க மாட்டார்கள் என்ற எண்ணமே எம்மை இது செய்யத் தூண்டிற்று."

மிகவும் வணக்கத்துடன் பிரதாப சந்திரன் இவ்வாறு அரசரை நோக்கிப் பதிலிறுத்தான்:—"அரசே! இராஜ புத்திரர்களுக்குக் கடமையை சரிவரச் செய்வதே உயிரினும் பெரிதாகும். என் மீது தாங்கள் கொண்டிருக்கும் நம்பிக்கையை எண்ணி சந்தோஷப்படுகின்றேன்."

பின் விடைபெற்று, சேனையோடு சென்றான் பிரதாபன்.

சுமார் 6 தினங்கள் கடும்போர் நிகழ்ந்தது. மணிபுரம் முகம்மதிய வீரர்களின் கையில் சிக்கியது. உக்கிரசிங்கனும் ராஜ குடும்பத்தார்களும் சிறையிலடைக்கப்பட்டார்கள். அப்பால் என்ன செய்யவேண்டு மென்பதைக் குறித்து சக்கரவர்த்தியின் அபிப்பிராயம் அறியத் தூதுவனை தாவுத் அப்துல் கான் என்ற ஔரங்கசீபின் பிரதம சேனாதிபதி அனுப்பினான்.

* * *

மணிபுரம் ஓர் சிறிய தேசம். எங்கு நோக்கினும் அடர்ந்த சோலைகள் அழகுற அமைந்திருந்தன. மனோஹரமாகிய அரண்மனை! அதைச் சுற்றிலும் பூங்காவனம். எப்புறமும் பசிய செடி கொடிகள் வளர்ந்து காணப்பட்டன. கண்ணுக்கும் மனதுக்கும் நித்தியானந்தத்தை அளித்தன அவை.

உக்கிரசிங்கன் சிறைச் செய்யப்பட்டுச் சில நாட் கழிந்ததும் அவனது புதல்வியாகிய சந்திரிகை (கைதியாயிருந்த) மணிபுர அரண்மனைத் தோட்டத்தில் உலாவச் சென்றாள். அப்போது மாலை வேளை. மலர் மணம் தாங்கித் தென்றல் ஜில்லென வீசிற்று. செந்நிற ஆடை அணிந்த பகலவனும் கடலைநோக்கி அதி வேகமாகப் போய்க் கொண்டிருந்தான். பரிதியின் செந்நிறப் பிம்பம் பூங்காவனத்தின் நடுவே காணப்பட்ட நீர் நிலையத்தில் காணப்பட்டது. செடிகளில் பூக்கள் அபரிமிதமாகக் காணப்பட்டன. தடாகத்தின் சமீபத்தில் தென்பட்ட படிகட்டில் யௌவன சந்திரிகை சரஸ்வதியைப் போல் காணப்பட்டாள். இரு கண்களிலிருந்து நீர் பெருகும் முகத்துடன் வீற்றிருக்கும் அப்பெண்ணின் விளறிய வதனம் பரம வேதனையைக் கக்குவதாகவே காணப்பட்டது.

நந்தவனத்தின் அழகிய தோற்றத்தைக் கண்டு களிக்க, அங்கு, போந்த பிரதாப சந்திரனைக் கண்ட காரிகை மரியாதையாக எழுந்து, நிலத்தை நோக்கிய வண்ணமாகவே மாறி நின்றாள். பூருவமடைந்த பெண்ணின் பக்கத்தில் வந்தது தவறு என்பதை யுணர்ந்த, பிரதாப சந்திரன் "அம்மணி, பொறுக்க வேண்டும். இப் பூங்காவனத்தின் இயற்கை அழகைக் கண்டின்புறவே இங்கு வந்தேன்" என்று மரியாதையாகக் கூறினான்.

பெண்:—இவ்வேளையில் இயற்கையழகை கண்டானந்திக்க இங்கு வந்த தாங்கள் நிச்சயமாகவும் உக்கிரசிங்க மஹாராஜாவின் பிரஜைகளி லொருவராயிருக்க இடமில்லை. எதிரியானால் மன்னிக்கும்படி என்னிடம் வேண்டுதற்கில்லை.

பிரதாப:—தாங்கள் அந்தப்புரப் பெண்களி லொருவரா யிருக்கலாம் போலிருக்கிறது. இப்பூங்காவனம் அந்தப்புரக் கன்னியர்களுக்காக அமைத்திருக்கலாமென்று நினைக்கிறேன்.

பெண்:—நான் மகாராஜனின் ஏக புதல்வி. என் பெயர் சந்திரிகை. நீங்கள் சக்கிரவர்த்தியினின் படைத் தலைவரில் ஒருவராயிருக்கலாம்.

பிரதாப:—அரசகுமாரி நினைத்தது முழுவதும் சரி. இப்பூங்காவனத்தில் நான் வந்தது பிசகு என்பதை அறிந்தேன். ஆகவே மன்னிக்கும்படி மறுமுறையும் வேண்டுகின்றேன்.

இருவர் கண்களும் சற்றுநேரம் கலந்துறவாடின. இருவரும் ஒன்றும் பேசவில்லை. பிரதாபன் அவ்விடம் விட்டு அகன்றான். அழகிய அப் படைத் தலைவனின் மரியாதையான நடவடிக்கையும், சுந்தரமான பேச்சும், சந்திரிகையின் அகக்கண்களில் சினிமா படம் பிடித்ததுபோல் பதிந்தது. "எனது மாணத்தைக் குறித்து கருதிக்கொண்டிருக்கும் இந்த வீண் எண்ணம் ஏன்?" என்ற தோற்றம் அவளிதயத்தில் உதித்தது. முகம்மதிய அரசனின் அடிமையாய் வாழ்வதைவிட இறப்பதே இராஜபுத்திரப் பெண்களின் வழக்கமாகும். தன்னோடு இதமுடன் பேசிய இளைஞனின் ஈடிலா அழகில் ஈடுபட்டிருந்த மனதை மாற்றுவதற்கு எவ்வளவோ முயற்சி செய்தாள். எண்ணிறந்த எண்ணங்கள் அவளது இதயத்தில் தோன்றி மறைந்தன.

உக்கிரசிங்க மகாராஜனின் ஏக புதல்வியாகிய சந்திரிகையின் அழகைக் குறித்து அறியாதாரில்லை. அப் பெண்ணை மணக்க விரும்பிய அரசர்கள் பலர். இவ் விஷயத்தில் சந்திரிகையின் சம்மதத்தையே மகாராஜா விரும்பினார். சந்திரிகையின் கலியாண வைபவம் மிக மிக ஆடம்பரமாக நடத்திக் கண்டானந்திக்க வேண்டுமென்பதே அரசனின் அவாவாகும். ஆனால் அந்தோ இன்று சந்திரிகை முகம்மதிய அரசனின் கைதியாக விருக்கின்றாள்!

பிரதாபசேனன் சந்திரிகையைக் குறித்துப் பல தடவை கேள்விப்பட்டிருந்த போதிலும் அன்றுதான் நேரில் கண்டான். சந்திரிகையின் சந்திரனையொத்த சாந்த வதனமும், களினப் பேச்சும், பொன்னிற மேனியும், பொய்யோ எனும் இடையும், நீண்டு கறுத்திருண்ட கூந்தலும் பிறவும் பிரதாபனை மயக்கின என்று கூறின் பிழையாகாது. தனது உள்ளத்தைக் கொள்ளை கொண்ட பெண்ணின் நிலைமை, அவ்வாலிப வீரனை உள்ளும் புறமுமாக உருக்கியது. எப்படியாவது சந்திரிகையை ரக்ஷிக்கவேண்டு மென்று அவனது மனம் கண்டிப்பான உத்தரவிட்டது. ஆகவே தூதுவனை எதிர்பார்த்த வண்ணமாகவே யிருந்தான்.



சுமார் இரண்டு நாட்கள் கழிந்தன. தூதுவனும் வந்து சேர்ந்தான். சக்கரவர்த்தியின் கட்டளையை யறிய பிரதாபன் பெரிதும் ஆத்திரப்பட்டான். நெஞ்சம் படபட வென்று அடித்தது. "எல்லாம் அப்துல்கானின் மனம் போலவே ஆகட்டும்" என்பதே சக்கரவர்த்தியின் கட்டளை. இதை யறிந்ததும் பிரதாபனின் முகம் வாடியது. தாவுத் அப்துல்கான் சாதாரணமாக பகைவரோடு இரக்கம் காட்டுவதில்லை யென்பது பிரதாபசேனன் அறிந்ததேயாம். சக்கிரவர்த்தி, தம்மீது நம்பிக்கை கொண்டிருக்கின்றார் என்பதைத் தற்பொழுது அறிந்த கான், எதிரிகளுக்கு மிகக் கடுமையான தண்டனையளிக்க வேண்டுமென்ற எண்ணம் கொண்டான்.

"அரச குடும்பம் முழுவதும் இஸ்லாம் மதத்தைத் தழுவவேண்டும். உக்கிரசிங்கன் சக்கிரவர்த்தியின் படைத் தலைவரி லொருவனாய் வேலை பார்க்க வேண்டும்-இன்றேல் ஆண் பெண் வேற்றுமையின்றி எல்லோரையும் வெட்டிக் கொல்ல வேண்டும்." இதுவே தாவுத் அப்துல்கானின் விதி. பிரதாபனின் மனம் குழம்பியது. கானின் தீர்ப்பை மாற்றுவது நாய் வாலை ஒழுங்காக்குவதற்குச் சமமாகும். இவ்விஷயத்தை எதிரியோடு அறிவிக்க பிரதாபனையே கான் அனுப்பினான். நொந்த புண்ணில் கோல் கொண்டு இடிப்பதுபோல் பரமவேதனை யடைந்த பிரதாபசேனன் பலபல பலப்பல எண்ணங்கொண்டு ஏங்கிக் கலங்கி நின்றான்.

பிரதாபசேனன் அரண்மனைக்குச் சென்றதும் அங்கு கண்ட காக்ஷி அவனைத் திகிலடையச் செய்தது. உக்கிரசிங்க மகாராஜாவும் மகாராணியார் ராதாபாயும் கௌரவமாகப் பேசிக்கொண்டிருந்தார்கள். மூத்த புதல்வன் இராஜேந்திரனும் விஜய சிங்கனும் அருகாமையில் நின்றார்கள். சந்திரிகை தந்தையின் மடிமீது அமர்ந்திருக்கின்றாள். புதல்வியை நோக்கி மகாராஜா கண்ணீர் விடுவதைக் கண்ட பிரதாபன் நெஞ்சம் வெதும்பியது. கானின் கருத்தை எவ்வாறு உரைப்பதென்று கலங்கினானெனினும், கடமையை யுன்னித் திடம் கொண்டு விஷயத்தை அரசனிடம் அறிவித்தான்.

உக்கிரசிங்கனின் ஒளி பொருந்திய வதனம் கோபத்தாலும், தாபத்தாலும் சிவந்தது. கண்களிலிருந்து தீப்பொரி பறந்தன. தீயுமிழ்கின்ற கண்களோடு வீரம் செறிந்த குரலில் இவ்வாறு கூறினான். "என்ன மகமதீய மதம் தழுவவேண்டுமா நாங்கள்? நன்று—அடிமையாக உயிர்வாழவும் வேண்டுமோ? மிகவும் நீதியான உத்திரவு சந்தோஷமான செய்தி. நான் போரில் தோல்வியடைந்ததால் எனது நாடு ஔரங்கஸீபு அரசனுக்குச் சொந்தமென்பதை ஒப்புக் கொள்கின்றேன். ஆனால் — இந்த நிபந்தனைக்கு—ஹா! உட்படுவதா! எல்லாம் இழந்தபோதிலும் இராஜபுத்திர வம்சத்தார்க்கு இயற்கையாயமைந்த சுத்தச் சுதந்திரத்தை இழக்கவே மாட்டார்களென்பதை உங்கள் அரசன் அறியாரோ! முகம்மதீய தாஸனாகிய படைத்தலைவனே! மணிபுரத்தை ஆண்டுவந்த உக்கிர சிங்கனும், குடும்பத்தாரும் உயிர்விட இதோ தயார் என்பதை உங்கள் சக்கிரவர்த்தியிடம் அறிவிப்பீராக!"

இவ்வீர மொழிகளைக் கேட்டதும் பிரதாபனின் மனம் வெட்கத்தாலும் விசனத்தாலும் நொந்துருகியது. உக்கிரசிங்கனின் வீர குடும்பத்தாருக்கு நேர்ந்த விபரீத காலமோ, தனக்கு நேர்ந்த வியாகூலமோ, எது கடுமையானது என்று தத்தளித்துப் படத்தில் காணும் பதுமை போல, சில நிமிடநேரம் அசைவற்று நின்றான். பின்னர் சந்திரிகையின் முகத்தைப் பலமுறை பார்த்தாள். தந்தையின் வீர உரைகளை சிரத்தையோடு கேட்டுக் கொண்டிருந்தார்கள் மைந்தர்கள். சந்திரிகையின் கண்களும் பிரதாபசேனனின் நயனங்களும் ஒருமுறை சந்தித்தன. கௌரவத்தோடு தனது முகத்தை அப்புறம் திருப்பிக் கொண்டாள் சந்திரிகை. என்றாலும் பிரதாபனைக் குறித்து அணுவளவும் வருத்தமில்லையென்ற எண்ணம் அவளது விளறிய முகத்திலும் இலங்கியது. திடீரென்று அரசகுமாரரின் வதனத்தில் ஒளி தோன்றியது. சந்திரிகையும் அவளது சகோதரனும் அவ்விடம் விட்டு நீங்கினர்.

மகாராஜாவின் மனதில் பலவித எண்ணங்கள் மாறிமாறித் தோன்றி வேதனை செய்தன. என்றாலும் இறுதியில் உறுதிகொண்டவன்போல் காணப்பட்டான். பின்னர் இவ்வாறு கூறினான்:— "வாலிப வீரனே! சூரிய சந்திரர்களோடு தோன்றிய ஒரு இராஜபுத்திர குடும்பத்தின் இறுதி வேளை காண்பதற்கு அஞ்சி ஆண்மையற்று இவ் விஷயத்தைச் சொல்கின்றேன் என்று நினைக்கவேண்டாம். எங்கள் குடும்பம் நிலைப்பதற்கு ஒருயிரைத் தவிர நாங்கள் அனைவரும் இறப்பதற்கு இந்த நிமிடம் முதல் தயாரா யிருக்கின்றோம். சக்கிரவர்த்தி அதற்கு இடம் கொடுப்பாரா, என்று அறிய ஆசைப்படுகிறேன்."

பிரதாபன் "பிரதம சேனாதிபதியோடு கலந்து பதில் கூறுகின்றேன்." என்று கூறிச் சென்றார்.

* * *

சிறிது நேரத்தின்பின் பிரதாபசேனன் மீண்டுவந்து மகாராஜனை நண்ணி அரச குடும்பத்தி லொருவனைத் தவிர மீதியுள்ளோர்களை யெல்லாம் தனது கையால் வாளெடுத்து வெட்டி வீழ்த்துவதற்கு சம்மதமானால் அன்றி

மட்டும் உயிர் வாழ தான் அனுமதித்துளாரென்று கூறினான். பயங்கரமாகிய நிம்மதி சிலநேரம் அங்கு நிலவியது.

உக்கிரசிங்கன் மூத்தபுதல்வனை அழைத்து "இராஜேந்திரா? எங்களை எல்லோரையும் வெட்டிக் கொல்லவேண்டும். குடும்ப விருத்திக்காகவே நீ உயிர் வாழவேண்டும் என்பது எனது விருப்பம்" என்று கம்பீரமாகக் கூறினான். இராஜேந்திரனின் நயனங்கள் அன்னையை நோக்கின. பின்னர் தந்தையை சாஷ்டாங்கமாக நமஸ்கரித்து "மகாராஜாவே! பயங்கரமாகிய இக்கட்டளையை என்மீது போடவேண்டாம். நான் பயந்து கூறவில்லை. இவ்வேளையிலும் எதிரியோடு போர் செய்து இறக்க ஆயத்தமாயிருக்கின்றேன்" என்றான்.

மகாராணியார் இவையெல்லாம் கேட்டு மயங்கி வீழ்ந்தாள். சந்திரிகை தாயின் திருமேனியைத் தடவிகொண்டிருந்தாள். சற்றுநேரம் கழிந்து "மகாராணியார் கண் திறந்தாளெனினும் கண்களிலிருந்து நீர் வடிந்தது. சந்திரிகை இளைய சகோதரனிடம் இக்காரியத்தை ஏற்றுக்கொள்ள வேண்டினாள். "மாற்றானின் வாளினால் மடிவதைவிட விஜயஸிங்கனின் கையினால் இறப்பது சிலாக்கிய"மென்று மகாராணியாரும், இராஜேந்திரனும் கூறினார்கள்.

மணிபுரம் அரண்மனைக்கு அருகாமையில் காணப்பட்ட பாறையின் உச்சியில் ஜனங்கள் நீர் ததும்பும் கண்களோடு வந்து கூடினார்கள். அக்கோரக் காக்ஷியை கண்ணால் பார்க்கக்கூடாது என்று சிலர் வாடிய முகத்துடன் தத்தம் வீட்டில் அழுதுகொண்டே இருந்தார்கள். அரசனுக்கு வந்த அவதியைக் கண்ட உக்கிரசிங்கன் பரமவேதனையடைந்தான்.

மாற்றானின் கையினால் மாள்வதைவிட தனது சுற்றத்தாரின் கை வெட்ட விண்ணுலகு சேர்வதே சிலாக்கியம் என்ற தங்கையின் மொழியைக் கேட்டு தைரியம் கொண்டு, கரத்தில் வாளேந்திக் தந்தையையும், தாயாரையும், தமயனையும், தங்கையையும் வெட்டிக் கொல்வதற்கு பாறையின்மீது நிற்கின்ற விஜய சிம்மனின் இதயம் இருளால் மூடியது போல் காணப்பட்டது. கூண்டிலடைக்கப்பட்ட சிங்கத்தை யொத்த உக்கிரசிம்மன் முதலாவது சப்பிரமாகப் புன்முறுவலுடன் நடந்து சென்று தாய் நாட்டை வணங்கிய பின்னர், தலையைத் தாழ்த்தி கொடுத்ததும் படீர் என்று ஓர் வெட்டு. மன்னன் மறைந்தான். இரண்டாவதாக குமாரராஜா இராஜேந்திரன் தாய் நாட்டை வணங்கி நின்று, தந்தை செய்தவாறே விஜய ஸிம்மனின் வாளிடையில் தலையைத் தாழ்த்தி கொடுத்ததும், வெட்டு விழுந்ததும் ஒரே நிமிடத்தில் ஆகும்.

இராஜ குமாரனின் முகத்தில் துக்க குறியைக் காணவில்லை. தனது கடமையை நிறைவேற்றுகின்றதென்ற புனித எண்ணம் விஜயஸிங்கனின் மனதில் விசனத்தை விரட்டியது. இதையெல்லாம் காணப் பொறாத மகாராணியார் மூர்ச்சையற்றுப் பாறையில் வீழ்ந்தமையால், சிரம் உடைந்து மரணமடையும் தருவாயை அடைந்தான். உடனேயே விஜய சிங்கனும் சந்திரிகையும் தாயாரை வாரியெடுத்து மூர்ச்சை தெளிவிக்க முயற்சித்தார்கள். எங்கு நோக்கினும் ரத்தம் ஓடுவதாகவே யிருந்தது. சொற்ப நேரத்தில் மகாராணியாரும் மூர்ச்சை தெளிந்து எழுந்தாள். ஆவேசம் பிடித்தவள் போல காணப்பட்டாள். மகாராணியார் மகளை நோக்கினாள். மகள் தாயாரைப் பார்த்த வண்ணமாகவே யிருந்தாள். இருவரும் ஒன்றும் பேசவில்லை. பின்னர் விஜயசிங்கன் ராதாதேவி ராணியாரை நோக்கி 'அம்மா அம்மா எனது சக்தி மறைந்தது. என் செய்வேன்? கடமையைச் செய்ய சக்தியற்றவனாய் தவிக்கின்றேன். ஐயோ! அடியேன் என்னை ஈன்றெடுத்து, பாலூட்டி பாராமரித்த தாயாரையையும், அவளது வயோதிக வேளையில் வெட்டிக் கொல்ல வேண்டுமோ! என்னால் முடியவில்லை' என்று நீர் பெருகும் கண்களோடு கலங்கி விம்மி, விம்மிக் கூறிய வார்த்தைகளை கேட்ட மகாராணியார், மனம் சகியாது பாறை மீது மண்டையை மோதி மரண மடைந்தாள். விஜயஸிங்கன் மூர்ச்சையானான்.

பிரதாப சந்திரன் சந்திரிகையை வெட்ட வேண்டாமென்று தாவுத் அப்துல் கான் புனராலோசனை செய்து கூறியதாக ஓடோடியும் வந்து அறிவித்தான். விஜயஸிங்கன் மூர்ச்சை தெளிந்ததும் தங்கையிடம் ஜீவித்திருக்க வேண்டினான். தங்களது குடும்ப உற்பத்தியை எண்ணிப் பெண்பாலாகிய சந்திரிகை ஜீவித்தேயாக வேண்டுமென்ற விஷயத்தைத் துன்பக்கடலிலாழ்ந்திருந்த அவ்வேளையிலும் இராஜ குமாரன் உபதேசிப்பதற்கு மறக்கவில்லை. சந்திரிகையோ இதற்கு உடன்படுபவள்? உக்கிர சிங்க மகாராஜாவின் உத்தரவிற்கும் பழுதுண்டோ — இல்லை. எதிரியின் தயவைப் புனராலோசனையின் பின்னர் பெற்று உயிர் வாழ்வதை வீர ரத்தம் ததும்பும் இராஜபுத்திர கன்னிகை ஏற்றுகொள்வாளா?

உடன் பிறந்தவனோடு ஏந்தியவாளினைக் கழுத்தில் ஓங்கிவெட்ட உத்தரவிட்டாள். வெட்டும் வீழ்ந்தது. இடையே பிரதாப சேனனை ஒரு முறை நோக்கினாள். ஆ! அந்நோக்கு பிரதாப சேனனை நமனுலகம் அனுப்பிய தென்றே கூறலாம். தனது காதலனை விண்ணுலகு வந்து சேரும்படி சொன்னதாகவே தோன்றிற்று. உண்மைக் காதல் சாவுக்கும் அஞ்சுமா? பிரதாப் சேனனும் இறந்தான்.

எங்கும் ரத்தமயம். ஆங்காங்கு வெட்டி வீழ்த்தப்பட்ட தலைகள். முண்டங்களின் மீது ரத்தம் புரண்டிருந்தது. ரத்த ஆற்றின் நடுவே தோன்றிய கற்சிலைப் போல காணப்பட்டான் இராஜபுத்திர வீர தீர விஜயசிம்மன்.

—





# எப்படி ஆரம்பிப்பது? (மகாத்மா எழுதுவது)

இதுவரை சில முக்கியமான உணவு வகைகளைக் குறிப்பிட்டு, கிராம வாசிகள் செல்வமும் சௌக்கியமும் எவ்வாறு பெறலாம் என்று விளக்கியிருக்கிறேன். இவற்றைவிட முக்கியமானதான சுகாதாரம் என்ற பகுதி ஒன்று இருக்கிறது. இதைச் சரிவரக் கவனித்தால் சௌக்கியத்தை நேர்முகமாகவும் மறைமுகமாகவும் அதிகப்படுத்தும்.

எல்லாத் தேசத்தினரையும் விட அதிக சுத்தமாக இருப்பவர்கள் இந்தியர்கள் என்று பல அன்னியநாட்டினர் கூறியிருக்கின்றனர். ஆனால் நமது கிராமங்களின் சுத்தத்தைப்பற்றி அவ்வாறு கூறமுடியாது. குடும்பத்திற்கு வெளியில் நாம் நமது கவனத்தைச் செலுத்தியதே கிடையாது. குடும்ப நன்மைக்காக கிராம நன்மையையும் தேச நன்மையையும் நாம் தியாகம் செய்துவிடுவோம். குடும்ப அங்கத்தினர்கள் சொந்த வீட்டை அதிக ஜாக்கிரதையாகப் பேணுவார்கள்; ஆனால் அவர்களுக்குப் பக்கத்து வீட்டினரைப்பற்றிக் கவலை இருக்காது. தங்கள் முற்றத்தைப் பூச்சி புழு வாராமல், அசுத்தமாகாமல் வைத்திருப்பார்கள்; ஆனால் அவற்றை எல்லாம் பக்கத்து வீட்டு முற்றத்தில் தள்ளுவதற்குத் தயங்க மாட்டார்கள். இம்மாதிரியாகக் கிராமத்தின் மொத்தப் பொறுப்பை நாம் ஏற்றுக் கொள்ளாதிருப்பதினால் கிராமங்களெல்லாம் குப்பை மேடுகளாக இருக்கின்றன. பொதுவாக நமது மக்கள் எல்லோரும் காலுக்குப் பாதரட்சை யணியாதவர்களாயினும், நமது தெருக்கள் எல்லாம், கொஞ்சம் சுத்தமாக இருப்பவன் வெறுங் காலுடன் நடப்பதற்குக் கூசும்படியாக, அவ்வளவு அசுத்தமாக இருக்கின்றன. கிராமக் குளம், கிணறு, ஆறுகளில் சுத்தமான குடிதண்ணீர் கிடைப்பது வெகு கஷ்டமாக இருக்கிறது. கிராம எல்லைகள் எல்லாம் குப்பையும் செத்தையும் நிறைந்த மேடுகளாகக் கிடக்கின்றன.

கிராம சுகாதாரம்தான், கிராமப் புனருத்தாரணச் சங்கத்தின் மிகவும் கஷ்டமான பிரச்னை. பொது மக்களின் ஒத்துழைப்பு இல்லாவிட்டால் எந்தக் கவர்மெண்டும் ஒரு நாட்டின் நடையுடை பாவனைகளை மாற்ற முடியாது. பொதுமக்களின் ஒத்துழைப்பு இருந்தால் அரசாங்கத்திற்கு அங்கு வேலையே இல்லை.

படித்த அறிவாளிகள்—வைத்தியர்களும் மாணவர்களும்—மனதுடனும், புத்திசாலித்தனமாகவும், ஆசையுடனும், இடைவிடாமலும் கிராமங்களில் வேலை செய்தால், இப்பிரச்னையைத் தீர்த்து வைக்க முடியும். தனிப்பட்ட மனிதனின் தேகாரோக்கியமும், பொதுக் கிராமத்தின் சுகாதாரமுந்தான் எல்லா கல்வியிலும் முதல் பயிற்சி.

கிணறு குளங்களைத் தூறு எடுப்பதும், குப்பை மேடுகளை அப்புறப் படுத்துவதும் கிராமங்களில் கவனிக்கப் படவேண்டும். தொண்டர்கள் இவ் வேலையில், கூலிக்கு வேலை செய்யும் தோட்டிகள்போல், ஈடுபட்டுக் கிராம வாசிகளும் இதில் ஒத்துழைக்கவேண்டும் என்றும் இவ்வேலையை அவர்களே கடைசியாகச் செய்துகொள்ள வேண்டும் என்று குறிப்பாக உணர்த்தினால், கிராமவாசிகள் அவசியம் ஒத்துழைக்கத் தான் செய்வார்கள். தென்னாப்பிரிக்காவிலும் சம்பாரணிலும், சமீபத்தில் நான் ஒரிஸா மாகாணத்தில் செய்த கால்நடைப் பிரயாணத்திலும், இது எனது அனுபவம்.

தெருக்களும் சந்துகளும் குப்பைகள் இல்லாது சுத்தப்படுத்தி, குப்பைகள் பிரிக்கப்படவேண்டும். கிராமக் குப்பைகளில் சிலவற்றை உரமாக உபயோகப் படுத்தலாம், சில பகுதியைப் புதைத்து விட வேண்டியிருக்கும், சிலவற்றை உடனே விற்றுவிட முடியும். குப்பைகளில் பொறுக்கப்படும் எலும்புகளில் இருந்து எத்தனையோ உபயோகமான பொருள்கள் செய்யலாம். எலும்புகள் தூளாக்கப்பட்டால் நல்ல உரம். குப்பைக் காகிதங்களும் கிழிந்த கந்தல்களும் மறுபடியும் காகித உற்பத்திக்கு உபயோகமாகும். மல ஜலங்கள் வயல்களுக்கு நல்ல உரம். இவற்றை மண்ணுடன் கலந்து ஓரடி ஆழத்தில் புதைத்து விடவேண்டியது. 'கிராம சுகாதாரம்' என்ற புஸ்தகத்தில் டாக்டர் பூர் என்பவர் மலஜலங்களை 9 அங்குலம் அல்லது 12 அங்குலத்திற்குக் கீழ் புதைக்கக் கூடாது என்று கூறுவதாக எனக்கு ஞாபகம். தரையின் மேல்மண் பரமாணுக்களான புழுக்கள் நிறைந்திருப்பதாலும், ஒளியும் காற்றும் உள்ளே செல்லக் கூடியதாக இருப்பதாலும், ஒரு வாரத்திற்குள் அவை நாற்றமற்ற மண்ணாக மாறி விடுகின்றன என்று கூறுகிறார். இதை எந்தக் கிராமவாசியும் தானே பரீட்சித்துப் பார்க்கலாம். இப்படிச் செய்வதற்கு, கக்கூஸ்களில் இரும்பு அல்லது மண் தொட்டிகள் வைத்து, அவற்றை இதற்கென்றே பிரத்தியேகமாக வெட்டித் தயாரிக்கப்பட்டிருக்கும் குழிகளில் போட்டு மூடியோ, அல்லது அக் குழிகளிலேயே மலஜல நிவாரணத்தைக் கழித்தோ செய்யவேண்டும். இவற்றை ஊர்ப்பொட்டலிலோ அல்லது சொந்த வயல்களிலோ புதைத்து விடலாம். இது கிராமவாசிகளின் ஒத்துழைப்பில் தான் நடக்கமுடியும். அல்லது தனிப்பட்ட கிராமவாசி இம்மாதிரி உரங்களைத் தானே தயாரித்துக்கொள்ளலாம். தற்பொழுது 1 லட்ச ரூ பெறுமானமுள்ள உரம் வீணாகப்போகிறது. அதுவுமல்லாமல் காற்றை அசுத்தப்படுத்தி வியாதிகளையும் உண்டுபண்ணி விடுகிறது.

கிராமக் குளத்தண்ணீர், குளிக்கவும், வெளுக்கவும், குடிக்கவும், சமையலுக்கும், பேதமில்லாமல் உபயோகப் படுத்தப் படுகிறது. பல குளங்கள் கால்நடைகளாலும் உபயோகப் படுத்தப் படுகின்றன. எருமைகள் குளத்தில் கிடப்பதைச் சாதாரணமாகப் பார்க்கலாம். இதில் ஆச்சரியம் என்னவெனில் இவ்வளவு தூரம் தாறுமாறாக உபயோகப்படுத்தியும் கிராமங்கள் தொத்து நோய்களால் நாசப்படாமல் இருப்பதுதான். கிராம வாசிகள் கஷ்டப்படும் பல வியாதிகளுக்குக்காரணம் அவர்கள் ஜலவசதிகளைக் கவலையீனமாக உபயோகிப்பதுதான் என்று எல்லா வைத்தியர்களும் அபிப்பிராயப் படுகின்றனர்.

# “மறுபடியும் அந்தக் கோர சிரிப்பு”

## ஹி! ஹி! ஹி!

(யாத்ரீகன்)

குழந்தைக் கண்தான்; ஆனால் அதில் தெய்வீக ஒளி வீசுகிறது. ஒட்டிய கன்னம்; உலர்ந்த நாக்கு; முதுகைத் ஒட்டிய வயிறு; தள்ளாடிடும் கால்கள்; சோர்ந்திட்ட கைகள்; மேற்படி அங்க லக்ஷணங்களுடைய ஒரு பிச்சைக்காரன்.

அவனது தலை எண்ணெயைக் கண்டு குறைந்தது 7, 8, வருஷங்களாவது ஆகியிருக்குமெனத் தோன்றுகிறது. கோடிக் கணக்கான பரிதாபகரமான ஜீவன்களில் இவனும் ஒருவன்!

அன்று தீபாவளி: காலை சுமார் 6 மணி இருக்கும்; எங்கு நோக்கினும் மங்களகரமான காட்சிகள்; பலகாரம் அருந்துவோரும்,—பட்டாடை புஷ்பங்கள் அணிவோரும்,—சைனு வெடி சுடுவோருமாக ஜனங்கள் காணப்பட்டனர்.

இவற்றை யெல்லாம் கண்டான் அப்பிச்சைக்காரன்; அவன் தனக்குள்

“ஹா! இன்னும் என்னுயிர் போகவில்லையே! அன்னம் கண்டு ஒருவாரமாகிவிட்டது. பசியின் கொடுமை தாள முடியவில்லையே! உயிர் உடலில் தங்கியிருக்கும் வரை நான் இவ்வயிற்றுக்காகப் போராடியே தீரவேண்டும் போலும்; ஹா! தெய்வமே.”

“இவ்வுலகத்தில் மங்களகரமாகக் கொண்டாடப்படும் இத்தினத்திலாவது நமக்கு ஒரு பிடி சோறு கிடைக்காதா! ஏதோ சென்று பார்ப்போம்,” என நினைத்துக்கொண்டே அக்கிரஹாரத்திற்குள் நுழைந்தான்.

அவனது கண்கள் பஞ்சடைந்து இன்றைக்கோ நாளைக்கோவென ஜோஸ்யம் சொல்லுகின்றன. இப்படிப்பட்ட நிலைமையில் தள்ளாடித் தள்ளாடி அடிமேலடிவைத்து மெல்ல ஊர்ந்து வரும் அப்பரிதாபகரமான ஜீவன் மெல்லிய குரலில்,

“அம்மா தாயே! கொஞ்சம் அன்னம் போடுங்கள்: சோற்றைக் கண்டு ஒரு வாரமாகிவிட்டது ஒரு பிடிசோறு கூட போடுவார் இங்கு கிடையாதா!” என்று கேட்கிறது.

“சோறுவது! பிண்டமாவது ஒரு மண்ணாங்கட்டியும் இங்கு கிடையாது! நல்ல நாள் பார்த்துப் பிச்சை எடுக்க வந்தாயோ,” என்று விரட்டுகிறார்கள் மாதர்கள்.

“ஏண்டா! திருட்டுப்பயலே! அசந்த சமயம் பார்த்து நகை நட்டை அடிச்சுக்கிட்டுப் போகலாமென வேஷம் போடுகிறியா? படவா; உதைவேணுமா ஓடுறியா” என கொக்கரித்துத் துரத்துகிறார்கள் அக்கிரஹாரத்துப் புலிகள்.

பட்டாசைக் கொளுத்தி அவன் மேல் போடுவதில் சந்தோஷம் கொள்கிறார்கள் சிறுவர்கள்.

இந் நிலைமையில் அவன் யாரிடமிருந்து ஒரு பிடி சோறு விரும்பி தன் ஆத்மாவின் துடி துடிப்பைத் தணிக்க முடியும்?

பெருமூச் செறிந்தான்: ஆகாயத்தை நோக்கினான்: மண்டையிலடித்துக் கொண்டான்: ஜனங்கள் என்ன செய்வார்கள்? ‘இது என் தலைவிதி’ என்று சொல்லிக் கொண்டான்.

அவனது கண்கள் நீரைத் தாரை தாரையாகக் கக்குகின்றன. நெஞ்சம் படபடவென அடித்துக் கொள்கிறது. நாக்குத் தடுமாறுகிறது. ஆனால் இன்னும் அவன் உயிர் உடலைவிட்டு நீங்கவில்லை.

“தெய்வமாம்! அது கருணைக்கடவுளாம்: கிருபாநிதியாம்: இதெல்லாம் என்ன மாயமான வார்த்தைகள்! உலகம் மிகவும் பொல்லாதது” எனப் பிதற்றிக் கொண்டிருக்கும் நமது பிச்சைக்காரன் மீது:

“ஏண்டா திருட்டுப்பயலே! சுவற்றில் கன்னமா வைக்கிறாய்?” என்ற கூக்குரலுடன் நாலைந்து அடிகள் அவனது சிரத்தில் விழுந்தன.

மயிரிழையில் தொங்கிக்கொண்டிருந்த ஜீவன் அக்கணமே விடுதலை பெற்றது.

அந்த ஜீவன் புத்துணர்ச்சி நிரம்பிய தாய், முதுமை கலந்ததாய், சுதந்திரம் பெற்றதாய் விடுதலை! விடுதலை! மோக்ஷம்! மோக்ஷம்!” எனக் கூவிக் கொண்டே ஆகாய வெளியில் அகண்ட ஜோதியில் ஐக்கியம் கொண்டது.

ஊசலாடிக் கொண்டிருந்த அப்பரிதாபகரமான ஜீவன் அக்கிரஹாரத்துப் புண்யமூர்த்திகள் சிலரின் தடியடிப் பிரயோகத்தால் விடுதலை பெறலாயிற்று.

தீபாவளி!—ஆம்! மறக்க முடியாத தீபாவளி! சமூகம் என்றும் தன் நினைவிலிருத்தக்கூடிய தீபரவளி!

பிச்சைக்காரன் கொலைக்குக் கேள்வி முறை கிடையாது. வைத்தது சட்டம், போட்டது திட்டம் என்றிருப்பவர்களைக் கேட்பது யார்?

ஆகாய வெளியிலிருந்து உண்டாகும் ‘ஹி! ஹி! ஹி!’ என்ற கோரச் சிரிப்பின் சப்தம்தான் பதில்.

மனிதத் தன்மை மறைந்து மிருகத் தன்மை தலைவிரித்தாடும் நமது சமூகத்தைக் கண்டு, அகண்ட ஜோதியுடன் கலந்த அஜ்ஜீவன் மறுபடியும் ஒரு சிரிப்புச் சிரிக்கிறது—‘ஹி! ஹி! ஹி!’

---

செய்வதற்கு ரம்மியமானதும் விருத்தி செய்வதுமான இவ் வேலை கஷ்டமுறும் இந்தியர்களுக்கு அளவிட முடியாத நன்மைகளை அளிக்கும் என்பதை எல்லோரும் ஒப்புக் கொள்ளுவார்கள். நான் இதுவரைக் கூறியதிலிருந்து இந்த வேலை எப்படி ஆரம்பிக்கப்பட வேண்டிய தென்று ஸ்பஷ்டமாக விளங்கியிருக்கும் என்று நம்புகிறேன். எழுத்து வேலையைப் போல் தோட்டி வேலையையும் மனம் கோணாது செய்யும் தொண்டர்கள் இருந்தால், இதற்குச் செலவே கிடையாது என்று கூறிவிடலாம். துடைப்பமும், கூடையும், மண்வெட்டியும், சுத்தப்படுத்தும் மருந்துகளும் வாங்குவதற்குத்தான் பணம் வேண்டும். சாம்பல், ரசாயன சாஸ்திரி கொடுக்கும் சுத்தப்படுத்தும் மருந்துகளைப் போல் அவ்வளவு நல்லது. கிராமங்களுக்கு ஏற்ற மலிவான சுத்தப் படுத்தும் மருந்துகள் என்னவென்பதை ரசாயன சாஸ்திரிகளில் யாராவது கூறுவார்கள் என்று எதிர்பார்க்கிறேன்.

—ஹரிஜன்.



# பாஸ்கராச்சாரியார் கண்ட பரம ரகசியம்

## ஒளவர் (Hour) எப்படி வந்தது?

### ஜோதிடத்தின் நிஜ ஸ்வரூபம்

(M. கிருஷ்ணன், B.A.)

சோதிடத்தை இந்துக்கள் கையாளத் தொடங்கி எத்தனை வருடங்களாயினவென்று திட்டமாய்ச் சொல்வதற்கில்லை. என்றாலும் சுமார் 23 லட்சம் வருடங்களாய்ப் பாரதமக்களின் கையாடலிலிருந்து வந்திருக்கின்றதென்று கூறலாம். முதன் முதலில் “ சூர்ய சித்தாந்தம் ” என்று ஒரு நூல் ஏற்பட்டதாகக் கேள்விப்படுகிறோம்.

ஜோதி சாஸ்திரம் ஏற்பட்டுச் சில வருடங்களானதும், பொதுஜனங்கட்கு அதன்பால் நம்பிக்கை குறையலாயிற்று. எனவே இன்று ஜோதிடர்கள் என்று கூறிக்கொள்பவர்களுங்கூட அது பற்றிய போதிய அறிவைப் பெறாதிருக்கின்றார்கள்.

இந்துக்களில் பலருக்குப் பூமி உருண்டை வடிவமுடையதா அன்றி பரப்பானதா வென்பது தெரியாது. சோதிடர்கள் என்று சொல்பவர்கள் கூடவும் பூமி பரந்திருக்கவில்லையா வென்று கேட்பார்களோ வென நினைக்கின்றேன்.

ஜோதி சாஸ்திரம் வேதமுண்டான நாள்தொட்டு இந்துக்களிடமிருந்து வருகிறதென்று நான் நம்புகிறேன்.

மனிதனுக்குக் கண் எப்படியோ—பூமிக்கு சூரியன் எப்படியோ—அது போன்று வேதத்தின் கண்ணாகும் ஜோதி சாஸ்திரம் எல்லா சாஸ்திரமும் சோதி சாஸ்திரத்தை அடிப்படையாகக் கொண்டவைதான், காலத்தைத் தெரிந்துகொள்ள வேண்டுமானால் ஜோதி சாஸ்திரம் பற்றிய ஞானம் வேண்டும். மோக்ஷ மெய்துதற்குக் கூட இது அவசியமாம். ஜோதி சாஸ்திரத்தின் முக்கிய பிரயோஜனம் ஒழுங்கான சரியான காலத்தை அறியும் பொருட்டே. காலத்தை அறியாமல் எந்த வேலையும் ஆரம்பிக்கலாகாது அன்றோ? ஆகவே தான் (காலத்தைச் சரிவர அறியும் பொருட்டு) பஞ்சாங்கம் என்றொரு நூலை எழுதியிருக்கிறார்கள்.

#### பஞ்சாங்கம்

பஞ்சாங்கம் என்றால் அஞ்சு அங்கம் என்பது பொருள். அங்கங்கள் பல. எனினும் 5 முக்கியமானவை. அவை திதி, வாரம் நக்ஷத்திரம், யோகம் என்பவைகளாம். இன்றையப் பஞ்சாங்கங்களில் சிலவற்றை யொத்துப் பார்த்தால் ஒன்றுக் கொன்று யானையும் கடுகும் போல வித்தியாசப் பட்டிருப்பதைக் காணலாம்.

#### வாரம்

வாரம் ஏழு. அவை ஞாயிறு, திங்கள் முதலியன. அவ் ஒவ்வொரு நாளையும் 24 பகுதிகளாக நம் பூர்வீகர்கள் பகுத்திருக்கிறார்கள். ஒவ்வொரு பகுதிக்கும் ஓரை என்பது பெயர். அதனையே ஒளவர் (hour) என்று ஆங்கிலேயர்கள் கூறுகின்றனர்.

#### திதி

சூரிய சந்திரர்கட்குள்ள வித்தியாசந்தான் திதி என்பது பூமியிலுள்ள எல்லாப் பொருட்களை விடவும் சூரியன் பெரியதென்பதும் சலன மற்றதென்பதும் சாஸ்திரத்தின் கூற்று. பூமி சூரியனையும் சந்திரன் பூமியையும் சுற்றிக் கொண்டிருக்கின்றன. சூரியனுக்கு சொந்தமான காந்தி (பிரகாசம்) உண்டு. மற்ற வஸ்துக்கட்கு சூரிய உதவியின்றி பிரகாசமில்லை. சூரியனின் ஜோதியை முழுமையாகச் சந்திரன் பெறும்போது பௌர்ணமி ஏற்படுகிறது. வெளிச்சத்தையே பெறாதபோது அமாவாசை என்கிறோம். சூரியனுக்கும் சந்திரனுக்கும் 360 டிக்ரி தூரமுண்டு. இம் முன்னூற்று அறுபது டிக்ரியையும் சந்திரன் ஒரு மாதத்தில் பிரயாணம் செய்கிறான். எனவே சந்திரன் தினசரி 12 டிக்ரி சஞ்சாரம் செய்கிறான் என்று ஏற்படுகின்றது. அதில் 12 டிக்ரி வித்யாசமுள்ள நாளை பிரதமை என்றும் 24 டிக்ரி வித்யாசமுள்ள நாளை “த்விதியா” என்றும் முறையே சொல்கிறோம்.

#### நக்ஷத்திரம்

ஆகாயத்தை 27 பாகமாகப் பிரித்து இரண்டு பாகங்கட்கு இடையே இருக்கும் இடத்தை நக்ஷத்திரமென்று சொல்கிறார்கள். ஆதல்பற்றியே 27 நக்ஷத்திரங்களேற்பட்டிருக்கின்றன. நாம் சாதாரணமாக அன்ன முகம்போல் காணும் நக்ஷத்திரம் அஸ்வினி என்று சொல்லப்படுகிறதென்று புகல்வது தவறாகும். அடையாளம் தெரிவதற்காகவே 27 பெயர்களைச் சொல்கிறார்கள். ஓரிடத்திலிருந்து மற்றோரிடத்திற்குச் சந்திரன் செல்வதை நக்ஷத்திர காலமென்று கூறப்படுகிறது. சந்திரன் பலமாதிரியான வேகத்துடன் இயங்குவான். பூமியின் சமீபத்தில் செல்லும்போது சீக்கிரமாகவும் தூரத்தில் செல்லும்போது மெதுவாகவும் இயங்குவான்.

#### கிரகணம்

அறிவிலிகளாகிய இந்துக்கள் பாம்பு விழுங்குவதால் சூரிய, சந்திர கிரகணங்கள் ஏற்படுவதாக நம்புகிறார்கள். பூமியின் நிழல் சூரிய சந்திரர்களில் படும்போதுதான் கிரகணம் உண்டாகிறது. ஆகாயத்திலிருக்கின்ற கிரகங்கட்கும் பூமிக்கும் ஒருவித சம்பந்த

முண்டென்பது வெளிப்படை. இல்லையானல் சூரியனைக் காணும்போது ஆம்பலும் (அல்லியும்) சந்திரனைக் காணும்போது தாமரையும் மூடிக்கொள்ள எதுவில்லையே? அன்றியும் ஆகாயத்திற்கும் பூமிக்கும் சம்பந்தமில்லையானல் அமாவாசை யன்று பைத்தியக்காரர்களின் நோய் அதிகரிக்கவும் அமாவாசை நீங்கினல் அச்சித்தப் பிரமை நீங்கவும் காரண முண்டோ?

இன்றைய நிலைமையில் சூரிய, சந்திர கிரகணங்கள் எப்பொழுது ஏற்படுமென்று இயந்திரங்களில்லையானல் கண்டுகொள்ள முடியாது. இந்துக்கள் அதற்கான இயந்திரத்தைக் கண்டு பிடித்திருக்கிறார்கள். இன்று கடிகாரம் என்று சொல்லப்படுகின்ற இயந்திரம் எத்தனையோ வருடங்கட்கு முன்பு இந்தியர்கள் கண்டறிந்ததாகும். ஆங்கிலேயர் நாகரிகம் எய்துதற்கு எத்தனையோ ஆண்டுகட்கு முன்னர் நாடிவலையம், யஷ்டியந்திரம், சக்கா இயந்திரம் முதலிய 10 வித இயந்திரங்களைக் கண்டு பிடித்திருக்கிறார்கள் இந்தியர். பூமியின் கவர்ச்சி வலியைக் கண்டு பிடித்தவர் சர் ஐசக் ந்யூட்டன் என்பது பலருடைய கருத்து. ஆனல் ந்யூட்டனுக்குப் பல்லாயிர வருடங்கட்கு முன்பே இந்துக்கள் அப் பூசக்தியைத் தெரிந்திருக்கிறார்கள். பாஸ்காராசார்யார் என்ற இந்துப் புலவருடைய நூலில் பூமியின் கவர்ச்சி வலி பற்றி குறிப்பிடப்பட்டுள்ளது. நாம் வசிக்கும் இடத்திற்குக் கீழே 180-வது டிக்ரியில் சித்தபுரி என்று ஒன்றிருப்பதாக பாஸ்காராசார்யார் கூறுகிறார். அந்த சித்தபுரியைத்தான் அமெரிக்க என்று ஆங்கிலேயர் கூறுகிறார்கள்.

இந்தியர்கள் இன்னும் சிரமப் பட்டு சோதிட சாஸ்திரத்தை அபிவிருத்தி செய்வது அவசியம்.

---

## கிட்டாநகரில் மாசி மஹோற்சவம்

கிட்டாநகரில் ஜாலான்பாரு ரோடில் இருக்கும் தெண்டாயுதபாணி கோவிலில் டவ வருடம் மாசி 7-ந் தேதி (18-2-35)யும் அடுத்த நாளாகிய 8-ந் தேதியும் மாசி மக மஹோற்சவம் டைபெறும் என்று கிட்டா நகரத்தார்ள் அறிவிக்கிறார்கள்,

## மஹாமஹோபாத்தியாய டாக்டர் உ. வே. சாமிநாதையவர்களின் எண்பதாம் ஆண்டு நிறைவு விழா.

---

மஹாமஹோபாத்தியாய தாக்ஷிணாத்யகலாநிதி டாக்டர் உ. வே. சாமிநாதையர் அவர்களுக்கு 1935-ஸ் மார்ச்சு மாதம் 6-ம் தேதி எண்பதாவது ஆண்டு பூர்த்தியாகின்றது.

தமிழ்மொழியும் தமிழ் இலக்கியமும் அபிவிருத்தியாவதற்கு அறுபது ஆண்டுகளாக திரு. ஐயர் மதிப்பரிய தொண்டுகளைச் செய்துவந்திருக்கிறார். தம்முடைய மெய்வருத்தங்களை ஒரு சிறிதும் பொருட் படுத்தாமல், தனியாகவே இருந்து சங்ககாலத்து அரிய பெரிய நூல்களைப் பாதுகாத்து ஆராய்ந்து பிழையறப் பரிசோதித்துப் பதிப்பிக்கும் பெருஞ் செயல் போற்றத் தகுந்தது.

அவர் செய்துள்ள பேருதவி பண்டைத் தமிழரின் நாகரிகத்தையும் பெருமையையும் நாம் இப்பொழுது அறிவதற்கு உதவுகின்றது. நமது தொன்மையைக் குறித்து நாம் நியாயமாகப் பெருமை பாராட்டிக் கொள்வதற்கு அவர்களே முக்கிய காரணமாக உள்ளார்கள். அவர்கள் தமிழுக்குச் செய்துள்ள ஒப்புயர்வற்ற தொண்டுகளைத் துரைத்தனத்தாரும் சர்வ கலாசாலையாரும் நன்கு மதித்து மஹாமஹோபாத்தியாயர், டாக்டர் என்னும் பட்டங்களை அவர்களுக்கு அளித்துக் கௌரவித்திருக்கிறார்கள்.

தமிழ்ப் பாஷாபிமானிகளும் கல்வியின் மேம்பாட்டைக் கருதுவோரும் தமிழ்ப் பெரியாராகிய ஐயாவர்களின் எண்பதாவது ஆண்டு நிறைவு விழாவைக் கொண்டாட விரும்புவார்கள்.

மார்ச்சு மாதம் 6-ம் தேதி புதன் கிழமை மாலை 5-மணிக்கு, ஐயாவர்களுக்கு உபசாரப்பத்திரம் ஒன்று அளித்தும், அவர்களுடைய உருவப் படத்தைச் சென்னைச் சர்வ கலாசாலை மண்டபத்தில் நிலைபெற வைத்தும், அவர்கள் செய்து வரும் நூற்பதிப்பு வேலைகள் தொடர்ச்சியாக நடைபெற்று வருவதற்குரிய ஏற்பாடுகளைச் செய்தும், பொருளுதவி செய்வோர் கருத்துக்கு ஒத்தபடி வேறு உசிதமானவற்றைச் செய்தும், அவர்களைப் பாராட்ட நிச்சயிக்கப்பெற்றுள்ளது.

பணம் அனுப்ப விரும்புவோர்கள் மயிலாப்பூர், வடக்குமாட வீதியிலுள்ள ஸ்ரீமான் கே. வி. கிருஷ்ணசாமி ஐயாவர்களுக்கு அனுப்பலாம். பொருளுதவி செய்வோரின் கூட்டமொன்று மார்ச்சு மாதம் முதல் தேதி வெள்ளிக்கிழமை மாலை $5\frac{1}{4}$ மணிக்குத் தேனும் பேட்டை மௌப்ரேஸ் ரோட்டில், தலைவர் கனம் பி. டி. ராஜனவர்கள் வீட்டில் நடைபெறும் என்று அதற்காக ஏற்பட்டுள்ள கமிட்டியார் அறிவிக்கிறார்கள். அக் கமிட்டியில் கனம் பி. டி. ராஜன் தலைவராகவும்; திருவாளர்களான டி. சிவராமசேதுப்பிள்ளை, பெ. நா. அப்புசாமி, எஸ். வையாபுரிப்பிள்ளை ஆகியோர் காரியதரிசிகளாகவும், திரு. கே.வி. கிருஷ்ணசாமி ஐயர் பொக்கிஷதாராகவும், அமைந்திருக்கிறார்கள்.



சக்கிரவர்த்தி திருமகளுரின் மருமகளான இன்பண்டா பீயட்ரிஸ் மணக்கோலத்துடன் காட்சி யளிக்கிருர்.



சென்னை மாகாணக் கல்லூரி வருட விளையாட்டில் பெண்கள் ஓட்டப்போட்டியில் கலந்துகொண்டனர். —P.P.B.



கொழும்பு மருதானை ரயில்வே ஸ்டேஷன்





கோவிலூரில் (காரைக்குடி) திரு. கே. வி. எஸ். அழகப்ப செட்டியார் அவர்களின் ஷஷ்டியப்த்பூர்த்தி விழாவை யொட்டி ஒரு கூட்டம் நடைபெற்றது. அதற்கு ராஜா சர் அண்ணாமலை செட்டியார் அவர்கள் தலைமை தாங்கினார்கள். பிரஸ்தாபக் கூட்டத்தில் கலந்துகொண்ட நாட்டுக்கோட்டை செட்டியார்கள் படத்தில் காணப்படுகின்றனர். —P.P.B.



மேற்படி கூட்டத்திற்கு விஜயம் செய்திருந்த செட்டியார்களில் சிலர். இடப்புறமிருந்து இரண்டாவதாக நிற்பவர் ராஜா சர் அண்ணாமலை செட்டியார். மூன்றாவதாக நிற்பவர் திரு. கே. வி. எஸ். அழகப்ப செட்டியார். —P.P.B.



வாலாஜாபாத் இந்து மத பாடசாலேக்கு ஜனுப் சௌக்கார் சி. அப்துல் ஹக்கீம் சாயபு பகதூர் விஜயம் செய்தபோது எடுத்த படம்.




சென்னைக் காங்கிரஸ் மண்டபத்தில், காலஞ்சென்ற ஏ. ரங்கசாமி அய்யங்காரின் படத்தை திரு. அருண்டேல் திறந்துவைத்தார்.

# பட்டணங்களைப் பற்றி

## ஆண்டானின் அபிப்பிராயம்

(சோ. வி.)

(சுமார் எழுபது வருடங்கட்கு முன்பு தமிழ் நாட்டைப் பாக்கள்பாடி முழக்கி வந்த ஆண்டான் 'கவிராயனை' அறியாதாரிருக்க முடியாது. வேடிக்கைடாகவும், பொருத்தமாகவும், சுடச் சுடவும் கவிபாடுவதில் அவரைப் போல் பலரைக் காண்பதற்கில்லை. நவீன அறிஞர் பர்னார்டு ஷா வெளியிடும் கருத்துக்களைப்போல விருக்கும் ஆண்டான் அறையும் உரைகள். அவர் பாடியதாகச் சொல்லப்படும் சில ஊர்களைப் பற்றிய பாக்களைக் கீழே தருகிறோம். இவை இதுகாறும் வெளி வந்ததாகத் தெரியவில்லை.)

### திருநெல்வேலி

நாசிப்பொடிக்கு நயக்குமூர், நாள்
[தோறும்,
வேசிக்கிடங்கொடுக்கும் வேளாணூர்,
— பூசிக்கும்
சைவம் பழுத்த சடங்களூர், தண்
[பொருனை
செய்வந்த நெல்வேலி சேர்.

### ஆரல்வாய் மொழி

கன்னி இளம்பருத்தி காய்க்குமூர்
[கார்காலம்
திண்ணை யெலாம் மண்மாரி பெய்யு
[மூர்—முன்னர்
முகட இருக்குமூர் முப்பந்தற்கு
[மேலவூர்
மூளி அரண்வாய் மொழி

(ஆரல்வாய் மொழி, அரண்வாய் வழி என்பதன் திரிபு ஆகும். அரண்வாய் மொழி என்றும் சொல்லப்படுகிறது. இது திருவாங்கூருக்கும் திருநெல்வேலி ஜில்லாவுக்கும் இடையே ஔவையின் பெருமை தங்கிய முப்பந்தல் என்னும் இடத்திற்குப் பக்கத்திலிருக்கிறது.)

### சுசீந்திரம்

ஒண்டொடிகட் காடவர்கள் ஓடுமூர்
[உண்மையிலா
மண்டையர்கள் கூடிமறியு மூர்
—தண்டமிழைக்
கற்றாரைப் போற்றாக் கசடரூர் தானு
[வென்போன்
எற்றே இருந்தனனோ யிங்கு?

(ஆண்டான் கவிராயர் தென் திருவாங்கூரிலுள்ள சுசீந்திரத்திற்குச் சென்றிருந்த காலையில் ஒரு கனவான் அவருக்கு அமுது படைக்க வீட்டுக்கு அழைத்துச் சென்றாராம். அவரது மனைவி சர்வ தரித்திரனாகத் தோன்றும் புலவனுக்கு சாதம் படைக்க மறுத்துப் புருஷனோடு சண்டை யிட்டாளாம். புருஷன் யாதும் செய்ய ஏலாது வாளாவிருந்தானும். அப்போது மேற்படிப் பாட்டுப்பாடப் பட்டதாகக் கூற்று.)

### கயிற்றாறு

பாளைமணம் கமழ்கின்ற கயிற்றாற்றுப்
[பெருமாளே பழிகாரா கேள்,
வேளை என்றாலிவ்வேளை பதினாறு
[நாழிகைக்கு மேலாயிற்றே,
தோளை முறித்ததுமன்றி நம்பி யானையுங்
[கூடச் சுமக்கச் செய்தாய்,
நாளையினி யார்சுமப்பார் எந்நாளும்
[உன் கோயில் நாசந்தானே!

[குறிப்பு:—கடைசிப் பாட்டு காளமேகப் புலவர் பாடியதாகவும் சொல்லப்படுகிறது. அதுபற்றிய விவாதத்தை இங்கு கிளப்பவில்லை. எப்படியும் இன்று கயிற்றாற்றுப் பெருமாள் கோவில் பாழ்பட்டுக் கிடப்பதைக் காண்கிறோம். அதற்குக் காரணம் இப்பாட்டுத்தானென்று சொல்லப்படுகின்றது. ஆண்டான் கவிராயன் திருநெல்வேலி ஜில்லாவிலுள்ள ஒரு முஸ்லிமென்று கூறும் ஒரு கக்ஷியுண்டு. இது விவாதத்திற்குரிய விஷயம்.]

---

# ‘அவசியமில்லா’ பந்துலு

(திருச்சி இடக்கரசனி)

விமலாவின் நடை, உடை, பாவனையெல்லாம் ஓர் ‘தனி’ஷோக்குதான். அவளுக்கு விவாகம் ஆய்விட்டது. காலை எட்டு மணிக்குத்தான் அவள் நித்திரையினின்று எழுவாள். எழுந்தவுடனே பெட் காப்பி. மாலை ஐந்துவரையிலும் நாகரிக நாவலை மனப்பாடம் செய்வாள். அப்பால் தனது காரை எடுத்துக்கொண்டு “விர்” என்று கடற்கரையை அடைவாள்.

*　*　*

விமலாவின் கணவன் பந்துலு 50 ரூபாய்ச் சம்பளக்காரன். காலை ஒன்பது மணிக்கு வீட்டை விட்டுப் போனால் மாலை எட்டு மணிக்குதான் வீட்டையடைவான். விமலா பணக்கார வீட்டுப் பெண்; ஆதலால் “கடு கடு” வென்று எதிர்கொண்டு அழைப்பாள். பந்துலுக்கு மனைவி விசாரமே பைத்தியம் பிடித்துவிடும் போலிருந்தது.

அன்று இரவு மணி ஒன்பது. அயர்ந்து சோபாவில் சாய்ந்தான் பந்துலு.

*　*　*

விமலா கடற்கரை மணலில் உட்கார்ந்து கொண்டு இருந்தாள். குஷால் பேர்வழிகள் கண்கள் பாய்ந்தன. கடலைப் பட்டாணிக்காரனும் இவளைச் சமீபித்தான்.

ஓர் அழகிய ஆடவன் அவள் சமீபமாகச் சென்றுகொண்டு இருந்தான்.

“அலோ” என்ற சப்தம் பிறந்தது.

திகைத்து நின்றான் வாலிபன்.

“உம்மைத்தான், வாரும், உட்காரும்” என்று கூறினாள்.

“நமது எண்ணம் நிறைவேறும் போல் இருக்கிறது” என்று மனதில் சிந்தித்தவண்ணம் அவள் அருகில் அமர்ந்தான்.

இரவு 8 வரையிலும் ஸரஸமாகப் பேசிக்கொண்டு இருந்தனர்.

“குட் நைட்” என்ற வண்ணம் ஙக குலுக்கிக் காரில் ஏறினாள்.

*　*　*

கார் வரும்சப்தம்,

பந்துலு அவள்மீது பாம்புபோல் சீற ஆயத்தமானான்.

விமலா அவனைக் கவனியாமல் உள்ளே நுழைந்தாள். அவனைக் கண்டு பேசினாள் இல்லை.

நாள்கள் கழியக் கழிய ராஜுக்கும் விமலாவுக்கும் காதல் பெருகியது.

மாலை ஏழு மணி இருக்கலாம். விமலா ராஜுவைப் பார்த்து “ஆமாம் உம் சவாரி போதும். என் கணவன் என்மீது “கடு கடு” என்று விழ்கிறான். நம் ‘பிளான்’ என்று நிறைவேறுமோ? நீர் சும்மாய் இருப்பதைக் கண்டால் இஷ்டக் குறைவுபோல் இருக்கிறது” என்று அழுத்திக் கூறினாள்.



“காதலி! எங்கு வேண்டுமானாலும் புறப்படலாம். கவலைப் படாதே” என்று தேர்தல் கொடுத்தான்.

“ஆனால் ஒரே ஒரு பயம்! உன் கணவர் ஏதாவது தீங்கு செய்வாரோ” என்றான் ‘வீர’க் காதலன்.

“எதற்காக?” நவீனக் காதலி.

“நாம் இருவரும் கூடியிருப்பதற்கு!”

“அதற்கு நான் ஜவாப்தாரி; ஆனால்.... ........” என்றாள்.

“ஆனால் என்ன?” என்று திகைப்புடன் கேட்டான்.

“பணம்?” என்று சாந்தமாய்க் கேட்டாள் பணக்காரக் காதலி.

“அதற்குக் கவலைப்படாதே” என்று அவள் கழுத்து நிறைந்த ஆபரணத்தை நோக்கி வீராப்புடன் கூறினான் தீரக் காதலன்.

“சரி, தயாராய் இரு நான் பன்னிரண்டு மணிக்கு வருவேன்” என்று வீடு அடைந்தான்.

*　*　*

பந்துலு விமலாவைப் பார்த்தவுடன் பலவிதமாய் ஏசிக் கொட்டினான்.

“இப்படி அடிமைத்தனமாய் வாழ முடியாது!”

“முடியாவிட்டால் எங்கேயாவது தொலை”

பதிவிரதை கணவன் விடை பெற்றாள்.

“என்னை இனிக் காணமுடியாது” என்று கூறி வெளி ஏறினாள் விமலா.

ராஜு தயாராய்க் காத்துக்கொண்டு இருந்தான்.

இருவரும் மாயமாய் மறைந்தனர். ரயில் ஏறினர்.

“மதனபுரி இதுதான். இதோ பார் என் பங்களா” என்றான் ராஜு.

ஆநந்த அலையால் மோதப்பட்டாள் விமலா.

அவள் கழுத்தில் நகையும் பையில் பணமும் இருக்கும்வரை ராஜு ஏன் காதலனாக மாட்டான். பங்களாவிற்கு வாடகை 100 ரூபாய். இருக்கிற ரீதியில் ராஜுவுக்கு காலந்து மாதங்களுக்குக் கவலை இல்லை.

---



## சென்னையில் மக விழா

அறுமுகம் படைத்த ஆண்டவனாகிய ஸ்ரீ தண்டபாணிக் கடவுள், அடியிற் குறித்த தேதிகளில் சென்னைப் பவழக்காரத் தெரு தனவைசியராகிய நகரத்தார் மடத்தினின்று திவ்விய ரதத்தில் ஆபரண அலங்காரமாய் வெள்ளி மயிலின்மீது ஆரோகணித்து, வாத்திய கோஷ்டிகளுடன் புறப்பட்டுத் திருவொற்றியூருக்குத் திருவுலாக் கொண்டு, அபிடேக தூபதீப பூசனை ஏற்று ஆங்கு நடைபெறும் மஹேஸ்வர பூஜை வைபவங்களைக் கண்ணுற்று, மீண்டும் ஸ்ரீ தியாகராஜப்பெருமான் சந்நிதியைப் பிரதட்சணமாய் வெள்ளிப் பரியூர்ந்து வாணவேடிக்கை வைபவக் காட்சியோடு சென்னைக்கு மீண்டும் போந்து, நகரத்தார் ராச்சிரமத்தில் நேமித்துள்ள சிங்காரத்தில் வந்தமர்தலால், இதைக் கண்ணுறும் ஆஸ்திக பக்திமான்கள் யாவரும் வந்திருந்து தரிசித்து இஷ்ட காமியாதிகளை யடைவதுடன் இகபர சுகங்களையும், பெற்றுய்வீர்கள் என்று எம்மண்ணலாகிய இறைவனைச் சதாச் சிந்தித்து ஏத்தி இறைஞ்சுகின்றனம்.

தேவகணங்கள் சூழ்தரப்புரவி, சாரதி பொற்புற அமைத்து ஜெகஜ்ஜோதியாய்த் திகழும் பொன் மயமான சிங்காரக் கோபுரத்தில் பழைய வீட்டு ஸ்ரீ தெண்டாயுதபாணிக் கடவுளும், திரண்ட பொருளாற் சிறிதுங் குறைவிலாச் சிற்ப முறைப்படி பொற்புறப் பூத, கஜ, அஸ்வ, சாரதி, துவாரபாலகராதி சர்வாங்க அலங்கார ஸ்வர்ண விக்ரக, ஸ்தூபி சகித திவ்வ தேசோமய கோடி சந்திரப் பிரகாசமான மகா அற்புத வெள்ளி ரதத்தில் புது வீட்டு ஸ்ரீ தெண்டாயுதபாணிக் கடவுளும் எழுந்தருளுதல்.

### நடைபெறும் விபரம்

பவஹு மாசிமீ 2உ புதன்கிழமை மாலை $2\frac{1}{2}$ மணிக்குப் புறப்படுதல்; 3உ வியாழக்கிழமை ஒற்றியூரில் மகேஸ்வர பூஜை; 4உ வெள்ளிக்கிழமை ஒற்றியூரில் மகேஸ்வர பூஜை; 5உ சனிக்கிழமை மகிழடி மகேஸ்வர பூஜை; 6உ ஞாயிற்றுக்கிழமை மகிழடி மகேஸ்வர பூஜை மாலை $3\frac{1}{2}$ மணிக்குத் திருவொற்றியூரின் கண்ணிருந்து புறப்பட்டுச் சென்னைக்கு வருதல்.

மேற்கண்ட ஐந்து நாளும் லீவு ஏற்படுத்தியிருப்பதால் அந்த நாட்களில் மட்டும் மதறாஸ் நம்மிடவர்கள் கடைகளில் கொடுக்கல் வாங்கல் முதலிய வேலைகளை நிறுத்தி வைக்கிறதென்று பேசி இருக்கிறார்கள் என்று சென்னை நகரத்தார்கள் அறிவிக்கிறார்கள்.

## பெண்கள் சுதந்திர மார்க்கம்

காந்திஜி செய்த ஒரு பிரசங்கத்தில் சொன்னதாவது :—

“பெண்களுக்குத் தொழிற் கல்வி புகட்டுவது அவசியமென நான் வற்புறுத்துகிறேன். அந்தக் கல்வி அவர்களைச் சுதந்திர முடையவர்களாகச் செய்யும். அவர்கள் கலியாண மாகாதவர்களா யிருந்தால் மற்றவர்களைச் சார்ந்து வாழவேண்டி யிராது; கல்யாணமானவர்களாயின், வீட்டிலே தம் கணவருக்கு உதவி செய்து வாழ முடியும்; விதவைகளாயிருப்பின், தங்கள் ஜீவனத்துக்கு வேண்டியதைத் தாங்களே சம்பாதித்துக் கொள்ளுவார்கள்.”

# முத்தம் கொடா 'மனைவி'

(கே. ஸி. கமலையா)

## I

சாந்தவண்ணப் பெருமாள் கோவிலின் சிற்பச் சிறப்பை வாயார வாழ்த்திப் புகழாதார் இல்லை. சிற்பிகள் தம் முழுத் திறமையையும் உபயோகப்படுத்திய சிலைகளில் வீரபத்திரன் சிலையும் ஒன்று. சிரமாலை அணிந்து ஆடுகின்ற ஆட்டமும், கோபச் சிரிப்பும், கம்பீரத் தோற்றமும் பார்ப்போரைப் பரவசப்படுத்தும். அக்கோவிலின் கோபுரமோ மேகத்தைக் கிழித்து வானத்தை முத்தமிடும் வலிய கைலாய பருவதம் போன்றது.

* * *

இராஜேஸ்வரி எப்பொழுதும் ஏகாந்த வாசத்தை விரும்புபவள். தன்னந்தனியாக அவள் ஒரு நாள் மாலை சாந்தவண்ணப் பெருமாள் கோவில் பக்கம் சென்றாள். கோவிலின் முன் மண்டபத்திலுள்ள சிலைகளைக் கண்குளிரக் கண்டு ஆனந்தபரவசமான பின் "பரிதியின் பரிக்காலை"த் தட்டும் கோபுரத்தின் உச்சிக்குப் போகும் விருப்பம் கொண்டாள். உடன் மெதுவாகக் கோபுரத்தின் உட்பாகத்தின் வழியே மேலே ஏறினாள். வழியில் ஏராளமான படிகளிருந்தன. அவற்றில் மெல்ல உட்கார்ந்து உட்கார்ந்து கடைசியாக உச்சி போய்ச் சேர்ந்தாள். கோபுரத்தின் மேல் தட்டிலிருந்தவாறே நான்கு அல்லது ஐந்து மைல் தூரத்திலுள்ள பல்வேறு கிராமங்களையும் பார்க்க முடிந்தது. சுதந்திரமுள்ள சுந்தரப் பறவைகள் கோபுரத்தின் அருகே பறந்து போவதும், காய்கதிர்ச் செல்வனின் சாயங்காலப் பிரகாசம் கோபுரத்தைத் தங்கமயமாக்குதலும், தூரத்தில் கரிய மேகத்தைக் கலந்தணையும் நீல மலையின் கம்பீரத்தோற்றமும் இராஜேஸ்வரிக்கு இன்பத்தைக் கொடுத்தன.

சிறிது நேரத்தில் தங்கு தடையின்றி அனுபவிக்கப் பெற்ற இராஜேஸ்வரியின் இன்பம் சிறிது தடைப்பட்டது. கோபுரத்தின் படிகளில் உச்சிக்கு யாரோ வருவது போன்ற சத்தம் கேட்டது. சற்றுப் பொறுத்ததும் ஒரு வாலிபன் இராஜேஸ்வரியின் முன் வந்து நின்றான். அவன் யார்? அடுத்த மாதம் அவளை மணக்கப் போகும் புருஷனே அவன்.

அவன் "பெண்ணரசே! பல நாளாக உன்னைச் சந்தித்துப் பேச வேண்டுமென்ற எண்ணம் இன்றே பூர்த்தி அடைந்தது! ஆலயத்துக்குள் வந்திருக்கிறாய் என்ற செய்தி தெரிந்து இங்கு ஓடோடியும் வந்தேன். என்ன இருந்தாலும் அடுத்த மாதம் நான் உனது கணவன்தானே! சற்றே நின் வாய் திறவாய்."

"ஐயா! அடுத்த மாதம் மணம் என்றால், மணம் நடந்த தினம் முதல் தானே நான் தங்கள் மனைவி? இப்போது யாருமில்லா இடத்தில் என்னை அணுகுதல் அழகா? என்னைத் துன்புறுத்தல் புருஷத்தனமா?" என்றாள் இராஜேஸ்வரி.

"ராஜம்! துன்புறுத்த வரவில்லை. உனக்கு இன்பந்தரவே வந்துளேன். எனக்கு ஒரு முத்தம் தந்தால் போதும்; அடுத்த க்ஷணமே இறங்கிக் கீழே போய்விடுகிறேன்." எனப் புகன்று விட்டு இராஜேஸ்வரியை அணுகினான்.

இராஜேஸ்வரியின் விழிகளிலிருந்து கண்ணீர் வழிய ஆரம்பித்தது. "ஐயா! அடுத்த மாதத்திலிருந்து நான் சதாவும் தங்களுக்குத்தானே உரியவள்? இப்பொழுது அபலையாகிய என்னை நிர்மானுஷ்யமான இந்த இடத்தில் கேவலப்படுத்துதல் சிறிதேனும் ஆண்மையா?" என்றாள்.

"என்ன சொன்னாலும் எனது செவி ஏற்றுக்கொள்ளாது," என்று சொல்லிக் கொண்டே அம்மங்கையை எட்டிப் பிடிக்க முயற்சி செய்தான் கிருஷ்ணசாமி.

இராஜேஸ்வரி வெளிப்பக்கம் பார்த்திருக்கும் வாசலை நோக்கிப் பாய்ந்து, அங்கே நின்றுகொண்டு, உடல் பதைத்தவளாய் "சீ! ஆணுருக்கொண்ட பெண்ணே! உனது வீரமோ வீரம்! தன்னந்தனியாக இருக்கும் பெண்ணைக் கெடுக்க வந்த அலியே! நீ இனி என்னைப் பிடிக்க ஒரு அடியாவது முன் வைத்தாயானால் அடுத்த நிமிடமே கீழே விழுந்து சுக்கல் சுக்கலாய்ப் போய் விடுவேன். எனது கற்புத்தான் எனக்கு உயரியது. உயிர் பிரமாதமல்ல," எனச் சொன்னதைக் கேட்டதும் கிருஷ்ணசாமி பிரமித்துப் போய்விட்டான்.

அதற்குமேல் தனது சோதனைகளைச் செய்து பார்க்க விரும்பவில்லை. "உன்னை மணம் முடித்த பிறகு ஒரு கை பார்த்துக் கொள்கிறேன். இவ்வளவு கிராக்கியா" என்று சொல்லிவிட்டுச் சரேலென்று கீழே இறங்கிச் சென்றான்.

இராஜேஸ்வரி உச்சியிலிருந்தே கிருஷ்ணசாமி வெகு தூரத்தில் வீடு நோக்கிப் போவதைப் பார்த்த பிறகு தான் கீழே இறங்கினாள்.

## II

பௌர்ணமி தினம். இளஞ் சந்திரன் உதயமாகி விட்டான். பட்சிகளெல்லாம் தமது கூடுகளுக்குத் திரும்ப ஆரம்பித்தன. இளநங்கையின் "நூபுரம் கலீர் கலீரெ"னச் சப்திப்பது போன்று பொருனையாறு சலசலவென்று ஓடிக்கொண்டிருந்தது. தனது மணலுடம்பில் எத்தனையோ காதலர்களுக்கு அந்திப் பொழுதில் சந்தோஷத்தைக் கொடுத்த பொருனையாறு மேலும் மேலும் இன்பத்தைக் கொடுக்கக் களைப்படையவில்லை. ஆஹா! எத்தனை யுகங்களாக இவ்வாறு பாடிக் கொண்டே ஓடுகிறது. என்ன மகிழ்ச்சி! என்ன குதூகலம்! ஈசனது படைப்புக்களில் ஒருவனாகிய மனிதனுக்கு ஆறு, மலை, பரிதி, மதி, முகில் இவைகளுக்குள்ள என்றுமழியா இன்பம் போன்று இன்பம் கிடைக்கிறதே இல்லை! பணமிருந்தால் மேலும் தேடவேண்டுமென்ற மனச் சமாதானமின்மை. படிப்பிருந்தால் பணமில்லையே என்ற ஏக்கம். படிப்பும் பணமும் இருந்தால் சாந்தியின்மை! பின் கூற்றுவர் போன்ற சில பெற்றோரின் தடைகள்! என்னே மனிதன்!

"இராஜேஸ்வரி! அடுத்த மாதம் நீ கிருஷ்ணசாமியின் தர்மபத்தினி. உன்னிடத்தில் அளவளாவ அதற்கப்புறம் எனக்குரிமையில்லை" என நிசப்தமாயிருந்த அந்நேரத்தில் இராமமூர்த்தி ஆகாயத்தைப் பார்த்த வண்ணமாய்ச் சொன்னான்.



இராஜேஸ்வரி பதில் ஒன்றும் சொல்லாது தலை குனிந்த வண்ணமாயிருந்தாள். பெருமூச்சு விட்டாள்.

"தாங்கள் எப்பொழுது ....சென்னை செல்கிறீர்கள்?" என்று சில நிமிடங்கள் கழித்து ஒவ்வொரு வார்த்தையாகத் தொண்டை அடைத்துக் கொண்ட கஷ்டத்தினால் கேட்டாள்.

"உனது மணத்துக்கு முன் தினம் எனக்குக் கல்லூரி திறக்கிறார்கள். நாளைக் காலைப் பிரயாணமாகிறேன்........ சரி, நாமிருவரும் இங்கு இருப்பது யாருக்கும் தெரிந்தால் உனது பிற்கால வாழ்க்கைக்குப் பங்கமேற்படும். உனக்கு வரப்போகும் கணவனும் பி. ஏ. பட்டதாரி. அடுத்த வருஷம் ஐ. சி. எஸ். பரீக்ஷைக்கு வாசிப்பதற்குச் சீமை செல்கிறான். உனது ஜீவியகாலம் சந்தோஷகரமானதாயிருக்க விரும்புகிறேன்" எனச் சொல்லிவிட்டு தனது இரு கரங்களாலும் கண்களைப் பொத்திக் கொண்டான்.

சட்டென்று எழுந்திருந்தான். கண்களைப் பொத்தின கைகளை எடுக்கவே இல்லை. "இராஜேஸ்வரி! அன்று கோபுரத்தில் கிருஷ்ணசாமியின் மனதைப் புண்படுத்திய மாதிரி இனிமேல் செய்தல் கூடாது. அவனே உனது வாழ்க்கைத் துணைவன்". என்று சொல்லிவிட்டு அழ ஆரம்பித்தான். இராஜேஸ்வரியும் அழுதாள். ஒரு வார்த்தை கூட அவளால் பேச முடியவில்லை. இராமமூர்த்தி திடீரென்று கண்களைத் துடைத்துக்கொண்டு" சீ! இதென்ன பேதமை! நான் ஏன் அழுகிறேன்! கலாசாலை நட்பைத் தவிர உனக்கும் எனக்கும் என்ன சம்பந்தம் இருக்கிறது! போய் வருகிறேன். உனக்கு மங்களமுண்டாகட்டும்" எனச் சொல்லிவிட்டு வெகு விரைவாக இராமமூர்த்தி நடக்கலுற்றான். இராஜேஸ்வரி தன்னையும் மறந்து கதற ஆரம்பித்தாள். ஏறிட்டுப் பார்க்காமலே சென்று விட்டான் அவ்வுத்தமன்.

## III

ஹாஸ்டல் மேன்மாடியின் திறந்த வெளியில் இராமமூர்த்தி கைபிடிச் சுவரின் மேல் உட்கார்ந்து கொண்டு புஸ்தகத்தைப் பார்ப்பதும் ஆகாயத்தைப் பார்ப்பதும் மனக் கவலையற்று ஆங்காங்கு விளையாடும் மாணவர்களைப் பார்ப்பதுமாய் இருந்தான். அச்சமயம் இராமமூர்த்தியின் நண்பன் ஒருவன் வந்து "தபாற்காரன் தங்களுக்கு ஒரு கடிதம் கொடுத்தான். பெற்றுக்கொள்ளுங்கள்", என்று கடிதத்தைக் கையிற் கொடுத்து "இந்த ரயிலில் ஒரு ஆளைச் சந்திக்க வேண்டியிருக்கிறது. சீக்கிரம் வந்து விடுவேன்" என்று சொல்லிவிட்டு விரைவாகக் கீழே சென்றான்.

இராமமூர்த்தி கடிதத்தைப் பிரித்து வாசிக்கலானான். அதில்,

"எனது ஆருயிர்க் காதலா!

நமஸ்காரம். எனதின்னுயிர்த் துணைவராகத் தங்களையன்றி வேறு ஒருவரையும் ஏற்றுக்கொள்ள எனது மனம் இடம் கொடுக்கவில்லை. தங்களையடையத் தந்தை அனுமதிக்கமாட்டார். ஆதலால் இந்த ஜன்மத்தில் தங்களை அடைவது முடியாத காரியம். தங்களை அடைய முடியாத நிலையில் நமனே எனக்கு உகந்தவன்! அவனை நோக்கி இப்பொழுது வெகு வேகமாகச் சென்று கொண்டிருக்கிறேன். விஷமருந்தின பிறகுதான் இதை எழுதுகிறேன்.

முருகவேள் தங்களுக்கு அருள் புரிவானாக!

'காதல், காதல், காதல்,
காதல் போயிற், காதல் போயிற்,
சாதல், சாதல், சாதல்'

அன்றோ? நமஸ்காரம்.

தங்கள் காதலி,
"இராஜேஸ்வரி"

என்றிருந்தது.

"ஆ! என் காதலி!" எனச் சாய்ந்தான் இராமமூர்த்தி. சற்று நேரத்தில் இருதயமுடைந்தது போலும்; வாய் வழியாக இரத்தம் பெருக்கெடுத்தது; கண்கள் மூடின; உடம்பு மாமரத்தது; இறந்தான்............ஆம்—இரு பிணங்கள்: இராஜேஸ்வரி வீட்டிலொன்று; இராமமூர்த்தி படிப்பறையிலொன்று.

---

தாயார்:—அடே சேஷா அப்பாவை எழுப்பு.

சேஷன்:—என் அம்மா?

தாயார்:—டாக்டர் கொடுத்த தூக்க மருந்தைச் சாப்பிடாமல் தூங்கி விட்டார். அதற்காகச் சீக்கிரம் எழுப்பு.

# செனிக்கா—உரோமாவின் சுடரொளி

## வரலாறும் உபதேசமும்

"திரிமூர்த்தி"

[செனிக்கா பன்னூறு ஆண்டுகட்கு முன்னர் உரோமாபுரியில் வாழ்ந்து வந்த ஓர் தத்துவ சாஸ்திரி. அவாது அறிவுரைகள் பொன்னே போல் போற்றப் படுகின்றன. சரித்திரக்காரர்கள் அவர் ஓர் சிறந்த மனிதரும் வேதாந்தியுமாவார் என்று சொல்கின்றார்கள். அவர் சொல்லிய தத்துவங்கள் அவருக்கு முன்பும் பின்பும் வாழ்ந்து வந்த தத்துவ சாஸ்திரிகளின் கூற்றை விட மகத்துவமானவை யென்பது நம்பிக்கை. நல்ல பத்தி கூர்மையுடைய செனிக்கா கோழை மனம் பெற்றிருந்தாராம். அவரது முழுப் பெயர் லூஷியஸ் அனியஸ் செனிக்கா என்பதாகும். ஸ்பெயினில் கார்டுபா என்ற இடத்தில் அவர் கிருஸ்தவ வருடத் தொடக்கத்தில் பிறந்தார் என்று சொல்லப்படுகிறது. அவாது தந்தையார் ஒரு பெயர் போன நாவலர். செனிக்கா சிறு பிராயமாயிருக்கும்போது அவர் (தந்தை) உரோமாபுரிக்கு வந்து குடியேறலானார். செனிக்கா பிராயம் அடைந்ததும் வக்கீல் தொழிலை மேற்கொள்ளப் பார்த்தார்; ஆனால் கலிக்குலா என்னும் சக்கரவர்த்தியின் பொறாமையினால் அத்தொழிலைத் தொடர்ந்து நடத்த முடியவில்லை. எனவே அவாது அருமந்த தொழிலான வேதாந்தத்திலிறங்க இடமேற்பட்டது.

கி. பி. 41-ல் செனிக்கா கார்சிக்காவுக்குத் துரத்தப்பட்டாரென்று தெரிகிறது. அதற்கான காரணமென்ன வென்பது திட்டமாகத் தெரியவில்லை. சக்ரவர்த்தி கிளாடியஸ் இறந்ததும் செனிக்கா நாட்டுக்குள் அனுமதிக்கப்பட்டார். அப்பால் இளஞ் சக்ரவர்த்தி நீரோவின் குருவாயமைந்திருந்ததாய்க் கேள்விப்படுகிறோம். அந்தக் காலத்தில் செனிக்காவின் தத்துவபோதம் மிகபோசமானதாயிருந்ததாம். அவாது கொள்கை சமாதானம் ஏற்படுத்துவது; ஆகையால் நீரோவின் பெரிய துன்மார்க்கங்கள் பல கண்டிக்கப்பட்டு விட்டுச் சிறியவையெல்லாம் விட்டுவைக்கப்பட்டன. ஆதலால் நாளடைவில் அவருடைய மனம் கெட்டுப்போய் விட்டது. மேலும் செனிக்காவின் நிலைமை அபாயமானதேயாம். நீரோவிடம் காரியம் சாதிக்க விரும்பிய பலர் செனிக்காவைக் கொன்று விடவும், அவாது ஆஸ்தியை அழித்து விடவும் முயன்றனர். உண்மையில் செனிக்காவின் பெரும் சொத்து அவருக்குக் கெட்ட பெயரையே உண்டு பண்ணிற்று. அதி சீக்கிரத்தில் அவரைக் குப்புற வீழ்த்தியதும் அதுவே.

கி.பி. 64-ல் நீரோவை ஸ்தானப்பிரஷ்டம் செய்வதற்குச் செய்யப்பட்ட சதி ஒன்று கண்டு பிடிக்கப்பட்டது. அதில் செனிக்காவின் பெயரும் கலந்திருந்தது. ஆதலால் அவர் தற்கொலை புரிந்து கொள்ளுமாறு உத்தரவிடப்பட்டார்.

அடியில் வருபவை 'லூஷிலியஸின் கடிதங்கள்' என்பதிலிருந்து எடுக்கப் பட்டவையாகும்.]

### கல்வியைப்பற்றி செனிக்கா

பல நூலாசிரியர்களையும் பல புத்தகங்களையும் பயில்வது, குழப்பமான அறிவையும் உறுதியற்ற இருதயத்தையும் உண்டு பண்ணிவிடும் என்பதை ஞாபகத்தில் வைத்துக் கொள்ள வேண்டும். உங்கள் ஞாபகத்தில் எதையேனும் சதா வைத்துக்கொள்ள வேண்டுமென மனமார நம்பினால் ஏதேனும் குறிப்பிட்ட நூல்களையே பின்பற்றி, அவற்றை நன்கு படித்து, ஆராய்ந்து, தெரிந்து கொள்ளல்வேண்டும். எதனையும் வாசித்து அவசரமாகவும் வேகமாகவும் முடித்து விடுகின்ற அன்பர்கட்கு மேற்படிப் போதனை மிகவும் இன்றியமையாதது. நாம் உட்கொள்ளு முணவு நமக்குப் பயன் தருவதில்லை; உண்மையான போஷணையையும் தருவதில்லை; அன்றி எந்நாளும் நிலை பெற்றுமிரா சில கற்பித மருந்துகளை அடிக்கடி மாறி மாறி உபயோகித்துக் கொண்டிருந்தால் உடல் அரோக நிலையெய்துமா? நமக்கேற்பட்ட ஒரு காயத்திற்கு (பரிசோதனை பார்ப்பது போல்) கண்ணில் கண்ட மருந்தை யெல்லாம் பூசிக் கொண்டிருந்தால் குணமேற்படாது என்பது உலகறிந்த உண்மையன்றோ? இடத்துக் கிடம் பிடுங்கி நடப்பட்டுக் கொண்டிருக்கும் எந்தச் செடியும் ஒருபோதும் செழிக்கவோ வேர்ப்போட்டுத் திடமெய்தவோ செய்யாது. நடுகையில் ஒருகால் சிறிது பிரயோஜனம் போல் தோற்றலாம். ஆனால் உண்மையிலில்லை.

பலவகையான புத்தகங்கள் மனதைப் பின்னப் படுத்துகின்றன. கண்ணில் காண்பவைகளை யெல்லாம் நம்மால் படித்து முடித்து விட முடியாது; ஆகையால் நமக்கு எவ்வளவு வாசிக்க முடியுமோ அவ்வளவு புத்தகம் மட்டிலுமிருந்தால் போதும். சிலகால் நீங்கள் ஒரு புத்தகத்தாலும், மற்றொரு கால் வேறொரு புத்தகத்தாலும் பிறிதொரு கால் மூன்றாவது மாதிரியான புத்தகமொன்றாலும் களிப்படையும் மனப்பான்மை உங்கட்குண்டு என்று கூறலாம். அப்படியானால் உங்கள் மனம் கண்ட கண்ட பொருட்களை யெல்லாம் தன்னிடத்தே சேர்த்துக் கொள்ள விரும்பும் ஆமாசயம் (இரைப்பை—Stomach) போன்றதென்னலாம். அப்படிப்பட்ட ஆமாசயம் ஏற்றபொருளை ஜீரணித்துப் பக்குவம் செய்வதற்குப் பதிலாக, உண்ட உணவினாலேயே கெட்டு அழிந்து போய்விடும். ஆதலால் உலகம் ஒத்துக்கொண்ட ஒரு சில குறிப்பிட்ட ஆசிரியர்களின் நூலைப்படியுங்கள். எப்பொழுதேனும் பொழுதுபோக்குக்காக மற்று சில நூல்கள் வாசிக்க நேரிட்டால் வாசித்து முடிந்ததும் பழைய ஆசிரியர்கள் நூலுக்கே மனதைத் திருப்பிவிடுக. எப்போதும் வறுமையோடு போராடுவ தற்கும், மரண பயத்தை யொழிப்பதற்கும், மனிதனுக்கேற்படக்கூடிய தொல்லைகளைத் தூரத்துவதற்குமான படைகளை (ஆயுதங்களை) உங்கள் படிப்புப் பெருக்கிக் கொண்டிருப்பதாயிருக்கவேண்டும். நீங்கள் போதுமான அளவு வாசித்து முடித்துவிட்ட பின்னர் ஒவ்வொரு நாளும் செயலில் ஆற்றுவதற்காகச் சில தத்துவங்களைத் தேடித் திரட்டி வைத்துக்கொள்ள வேண்டுவது தகுதி.

### பிரயாணம்

பிரயாணம் உங்களை ஒரு பிரசங்கியாக்கி விடவோ வைத்யனாக்கி விடவோ செய்யாது. இடங்களிலிருந்து எந்தக் கலையையும் கற்றுக் கொள்ளவும் முடியாது. அப்படியானால் எல்லாவற்றினும் மேலான அறிவைப் பிரயாணங்களின் மூலம் பெற்றுக் கொள்வ தெங்ஙனம்? நல்லது; கேளுங்கள். எந்தப் பிரயாணமாவது மனிதனை ஆசை, கோபம், பயம் முதலிய தீக் குணங்களிலிருந்து அகற்றி இருக்கின்றதா? சாதாரணமாக மனிதர்களெல்லாம் மகிழ்ச்சியை யுண்டுபண்ணும் இடங்களிலேயே குழுமுகின்றார்கள். காம, குரோத, லோப, மோக, மத, மாற்சர்யமென்ற கெட்டகுணங்களை நீங்கள் வைத்துக் கொள்வதானால், நீங்கள் எங்கு சென்றாலும் சரி,—கடல் மார்க்கமாகவோ கரை மார்க்கமாகவோ எங்கு செல்லினும்—தீமைகள் உங்களைச் சூழ்ந்திருக்கவே செய்யும். எனவே பிரயாணத்தினால் யாதொரு நன்மையுமில்லை என்று காண்பதைக் கண்டு ஆச்சரியப் படுகின்றீர்களா? ஆம்—நன்மைகள் என்று உலகம் ஒப்புக்கொள்கின்ற பண்புகளிலிருந்து நீங்கள் ஓடிக் கொண்டிருந்தால் எவ்வாறு நன்மை உங்களை எட்டும்? பிரயாணத்தின் பயனை எய்த வேண்டுமாயின் உங்களைச் சீர்திருத்துங்கள்; உங்கள் சுமைகளை யெல்லாம் அப்பால் போடுங்கள்; உங்கள் அருமையான ஆசைகளை யெல்லாம் குறைந்த பக்ஷம் ஒரு ஒத்துக் கொள்ளத் தகுந்த எல்லைக்குள்ளாவது கொண்டு வாருங்கள். எவ்விதக் குரூரத் தன்மைகளையும் மனதை விட்டு ஓட்டுங்கள். பின் இன்பகரமான ஒரு பிரயாணத்தை வேண்டினால், உங்கள் நீங்காத் துணையை விட்டுப் பிரியுங்கள். பேராசை என்பது உலோபகுணம் இச்சை என்னும் குணங்களோடு நீங்கள் உறவாடும் காலம் முழுதும் உங்களை விட்டு ஒழியாது. தற்பெருமையுடைய ஒருவனோடு நீங்கள் பேசுங் காலமளவும் நீங்கள் தற்பெருமையை இழந்தவராக முடியாது. அதேமாதிரி ஒரு கொலையாளியோடு சேர்ந்து வாழும் வரையிலும் நீங்கள் தயாள சிந்தையெய்த முடியுமா? அம்முறையில் காமப் பித்தர்களோடு ஸ்நேகம் பண்ணுந் தனிலும் நீங்கள் காமச்சுவையைத் தவிர்க்க ஏலாது. இங்ஙனம் பல கயமைக் குணங்களைவிட்டு விடுதலை பெற்றுவிட்டால், தீய முறைகளைவிட்டு எவ்வளவு நீங்கியிருக்க முடியுமோ அவ்வளவு நீங்கிவிடுதல் சாலும்.

---

### பிரசவ விபத்து இல்லாத தீவு

டிரிஸ்டான்டா குன்ஹா என்று ஒரு தீவு இருக்கிறது. அந்தத் தீவில் பிரிட்டிஷார் குடியேறி இருக்கிறார்கள். அங்கு 1816-ம் வருடத்திலிருந்து இந்த வருடம் வரை பல பிரசவங்கள் நடைபெற்றிருக்கின்றன. ஆனால் ஒரு குழந்தையாவது ஒரு தாயாவது பிரசவத்தின் காரணமாக அங்கு இறந்ததில்லை. இவ்வளவிற்கும் அந்தத் தீவில் டாக்டர்கள் கிடையாது. கைதேர்ந்த மருத்துவச்சிகள் மாத்திரம் இருக்கிறார்கள்.

## ரயில் போக்கு வரவு

### மதராஸ்-எழும்பூர்

#### மேயின் லைன்.

| வண்டிப் பெயர் | புறப்படும் நேரம் | வரும் நேரம் |
|---|---|---|
| இண்டோ ஸிலோன் எக்ஸ்பிரஸ் .... | மாலை 9 0 | காலை 6 40 |
| செங்கோட்டை பாஸஞ்சர் .... | காலை 6 55 | மாலை 7 25 |
| கூடலூர் பாஸஞ்சர்.... | மாலை 4 0 | காலை 11 55 |
| திருவனந்தபுரம் பாஸ்டு பாஸஞ்சர்.... | மாலை 9 30 | காலை 6 5 |
| திருச்சி பார்சல் .... | மாலை 10 20 | காலை 5 35 |

#### கார்டு லைன்.

| வண்டிப் பெயர் | புறப்படும் நேரம் | வரும் நேரம் |
|---|---|---|
| தனுஷ்கோடி பாஸ்டு பாசஞ்சர் .... | காலை 11 15 | மாலை 2 55 |
| திருவனந்தபுரம் எக்ஸ்பிரஸ் .... | மாலை 7 30 | காலை 7 15 |

### மதராஸ்—ஸெண்ட்ரல்

| வண்டிப் பெயர் | புறப்படும் நேரம் | வரும் நேரம் |
|---|---|---|
| கல்கத்தா மெயில் .... | மாலை 8 30 | காலை 8 35 |
| கிராண்டு டிரங்க் எக்ஸ்பிரஸ் .... | காலை 8 40 | மாலை 4 35 |
| பம்பாய் மெயில் .... | மாலை 8 40 | காலை 5 55 |
| பம்பாய் எக்ஸ்பிரஸ் .... | காலை 8 30 | மாலை 5 0 |
| பங்களூர் மெயில் .... | மாலை 9 30 | காலை 6 15 |
| ,, எக்ஸ்பிரஸ் .... | மாலை 1 0 | மாலை 2 10 |
| ,, பாஸஞ்சர் .... | காலை 6 15 | மாலை 7 40 |
| ,, ,, .... | மாலை 9 40 | காலை 5 30 |
| ஜோலார்ப்பேட்டை பாஸஞ்சர் .... | மாலை 12 45 | மாலை 2 0 |
| அரக்கோணம் பாஸஞ்சர் .... | மாலை 5 30 | — |
| ,, .... | 6 30 | — |
| மலபார் எக்ஸ்பிரஸ்.... | 8 5 | காலை 7 15 |
| ப்ளூமௌண்டன் எக்ஸ்பிரஸ் .... | 9 15 | 6 35 |

# கலியாணி

(சோ. வி.)

வாணீதாஸபுரம் என்பது ஒரு பூலோக ஸ்வர்கம். ஆனால் இந்த ஸ்வர்க்கத்தில் ஒரு விசேஷம். மேலே இருக்கும் பௌராணிகர் சுவர்க்கம் எப்படி யிருக்குமென்று அடியேனுக்குத் தெரியாது. ஆனால் இந்த ஸ்வர்க்கத்தைப் பொறுத்தவரை வாணியின் கடைக்கண் பார்வை ஒரு சிறிதும் படாத இடம் என்று எனக்குத் தெரியும்.

வாணீதால புரத்திற்குப் போக வேண்டுமானால் டிஸ்டிரிக்ட் போர்டு ரஸ்தாவை, விட்டு மாமரம் நிறைந்த வாய்கால் கரைமீது, அரை பர்லாங்கு நடக்கவேண்டும். ரஸ்தாவின் கீழ் பாரிசத்தில் ஊர். அதன் பக்கத்தில் தான் கிழக்கே பார்த்த சிவன் கோவிலில் தொடங்கி, பத்துப் பதினைந்து வீடுகள் உள்ள அக்ராகாம். பிறகு ஊர்ப் பொட்டல். சற்று வடபாகமாகப் போகும் சந்து, பிள்ளைமார் சந்து. அதற்கப்புறம் மறவர்கள் தெரு. இவ்வளவையும் கடந்துவிட்டால், அதாவது வேளாளர் தெருவின் தொடர்ச்சியான மறவர் தெருவின் கடைசிக்கு வந்துவிட்டால், வயலும் குளமும். குளம் தடாகமல்ல. வெறும் மண்கரையிட்ட ஏரி. சுற்றிலும் கண்ணுக் கெட்டிய வரை கழனிகள். வான வளையத்தைத் தொடும் மூலையில் பச்சை மாங்கள்.

வயல்களின் வழியாக இரண்டு மைல் நடந்தால் நதி. இரு கரையிலும் மருத மரமும் பனையும் கவிந்து நிற்கும். அதிலிருந்துதான் ஊரை யொட்டிப் பாயும் வாய்க்கால் புறப்படுகிறது. வேனிற் காலத்தில் குளத்திலும், வாய்க்காலிலும் ஜலம் வற்றிவிடும். அப்பொழுது விடியற்காலையில் ஸ்நானம் செய்வதை இன்பமாகக் கருதுவோர்கள் வாணீதாலபுரத்திற்கு வந்தால் இரண்டு மைல் நடையைத் துச்சமாகக் கருதுவார்கள்.

வாணீதாஸபுரம் தீவிர கதியில், வஞ்சனைச் சுழலிலும், தியாகப் பெருக்கிலும் செல்லும் நாகரிகத்தின் கறைகள் படியாதது. நாயக்கர்கள் காலத்தில் மானியமாகச் சிலருக்குக் கொடுக்கப்பட்டு ஆரம்பிக்கப்பட்ட காலத்தி லிருந்து இன்றுவரை, அழியாத, மாறுதல் இல்லாத, நித்திய வஸ்துபோல, பழைய பழகிய பாதைகளிலேயே ஓடிக்கொண்டிருந்தது.

கிராம வாசிகள் உயிர்வாழ்தலைப் பொறுத்தவரை வெளியூருக்குச் செல்ல வேண்டிய அவசியமும் கிடையாது, செல்வதுமில்லை. வேண்டியதெல்லாம் சாப்பாட்டிற்கும் துணிக்கும் தான். உடையைப் பொருத்தவரை 'கும்பினியான்' துணி வியாபாரத்தில் அதிக நம்பிக்கை. ஊர் கிராம வாசிகளுக்கு உலகம் எந்தத் திக்கில் செல்லுகிறது என்ற அறிவும் கிடையாது அறிய ஆவலும் இல்லை.

சனிக்கிழமைச் சந்தைக்கு இலை காய்கறிகளைத் திருநெல்வேலிக்குக் கொண்டு சென்று, கொள்முதல் செய்துவிட்டு, அன்று 12 மணி நேரத்தில் அரைகுறையாகக் கேட்டதை மறு சனிக்கிழமை வரை பேசிக் கொண்டிருப்பதில் திருப்தியடைந்துவிடுவார்கள்.

கோயில் பூஜை, உபாத்திமைத் தொழில், உஞ்சவிருத்தி என்ற சோம்பல் பயிற்சி அங்குள்ள பிராம்மண தர்மத்தின் பிரதிநிதிகளின் வாழ்க்கை இலட்சியம். வேளாண்மை என்றசோம்பல் தொழில் அங்குள்ள பிள்ளைமார்களின் குலதர்மம். மறவர்கள், ஏவின வேலையைச் செய்தல் ஊர்க்காவல், என்ற சில்லறைத் திருட்டு உள்பட்ட சோம்பல் தர்மத்தைக் கடைப் பிடித்தனர். பறச்சேரி ஊரின் போக்குடன் கலந்தாலும், அல்லும் பகலும், உழைத்துக் குடித்து, பேசிப் பொழுதைக் கழித்தது.

ஊருக்கு கிராம முனிஸீப்பு சுந்தரம் பிள்ளை, பண்ணையார் ராமையாப் பிள்ளை சுப்பிரமணிய பண்டாரம், சிவன் கோயில் அர்ச்சகர் சுப்புவையர் எல்லாம் 'பெரிய' மனிதர்கள், எல்லோரும் ஏகமட்டம்; ஏனென்றால் தற்குறிப் பேர்வழிகள். அவர்களில் 'மொத்தப் படித்தவாள்' என்று கருதப் பட்டவரே பிரைமரியை எட்டிப் பார்க்கவில்லை. எழுத்துக் கூட்டி வாசிப்பார்கள். தமிழ் படிப்புத் தெரியும் என்று கூறுவார்கள். ஆனால் வாழ்க்கைக்கு அவசியமான உலக அனுபவம் உண்டு; படித்தவர்களைப் போல் வடிகட்டின அசடர்கள் அல்ல.

II

அர்ச்சகர் சுப்புவையர், ஏறக்குறைய மெஜாரிட்டியைக் கடந்துவிட்டவர்.



குழந்தைகுட்டி கிடையாது. தமது 45 வயதில் 'மூத்தாளை' இழந்துவிட, இரண்டாவது விவாகம் செய்துக் கொண்டவர். இளையாள் வீட்டிற்கு வந்து சமீப காலந்தான் ஆகிறது. அவள் சிறு குழந்தை. 16 அல்லது 17 வயதுள்ள கலியாணி, சுப்புவையரின் கிரகத்தை மங்களகாமாக்கவே அவாது சமையல் காரியாகக் காலம் கழித்தாள்.

சுப்புவையர் மன்மதனல்ல. அதுவும் 50 வயதில் ஒருவரும் மன்மதனாக இருக்கமுடியாது. விதிவிலக்காக ருசியான பக்ஷணங்களுள்ள விருந்து சாப்பிடும் யாரும் வயிற்றை ஆலிலை இலட்சியத்திற்கு ஒத்ததுபோல் வைத்திருக்க முடியாது. நரைத்த குடுமியுடன், பஞ்சாங்கத்திற்கு ஒத்தபடி க்ஷவரம் செய்து கொள்வதாகச் சங்கல்பம் செய்து கொண்டால், நிச்சயமாக ஒருவனும் மன்மதனாக இருக்கமுடியாது.

சுப்பையர் சாதுப்பேர்வழி; கோவிலுண்டு, அவருண்டு. வேறு எந்த ஜோலியிலும் தலையிடுகிறதில்லை. வேளைக்கு வேலை நாவிற்கு ருசியாக உணவு கொடுத்து, தூங்கும்பொழுது கால் பிடித்துவிட்டு, தொந்திரவு செய்யாமலிருப்பதே மனைவி லட்சணம் என்று எண்ணுபவர். அதிலும், ஏறக்குறைய இருபது வருடங்களாகப் பழகி, திடீரென்று தன்னை விட்டுவிட்டு இறந்துபோன மூத்தாள் மீது அபாரப் பிரமை. அவருக்கு அது பழக்கதோஷம். அவளைப்போல் இனி யார் வரப்போகிறார்கள் என்ற சித்தாந்தத்தில் கல்யாணியின் பால்ய அழகும், சிச்ருஷையும் தெரியாது போய்விட்டது.

கல்யாணி, அவளும் ஏழைப்பெண் தான். உபாத்திமைத் தொழில் சாமிநாத கனபாடிகளின் மகள். அவ்வூரிலேயே பிறந்து, வெகு காலமாக மாமா வென்றும் சித்தப்பா வென்றும் அழைத்து வந்த ஒருவரைக் கணவனாகப் பெற்றவள். ஏழையாக பிறந்தால் அழகாகப் பிறக்கக்கூடாது என்ற விதியிருக்கிறதா? கலியாணியின் அழகு, ஆளை மயக்கியடிக்கும் மோகலாகிரியில் பிறந்த காமசொரூபம் அல்ல. நினைவுகள் ஓடி மறையும் கண்கள், சோகம் கலந்த, பார்வை. அவளது புன்னகை ஆளை மயக்காவிட்டாலும் ஆளை வசீகரிக்கும். அப்படி வசீகரிக்கப்படாதவன் மண் சிலைதான். சுப்புவையரும் ஏறக்குறைய அவர் வழிபடும் லிங்க வடிவத்திலிருக்கும் 'விரிசடைக் கடவுளின்' உருவச் சிலையின் இருதயத் துடிதுடிப்பைப் பெற்றிருந்தார். கல்யாணி வாலைப் பருவத்தினள். அதிலும் இயற்கையின் பரிபூரண சக்தியும் சோபையும் கொந்தளிக்கும் வயதினள். எதற்கெடுத்தாலும் தன்னை மாக்கட்டையாகக் கருதி இறந்த மூத்தாளின் பெருமையை நினைத்து உருகும், சுப்புவையரின் எண்ணங்களைத் தன் வசம் திருப்புவது என்ற கங்கணம் கட்டிக்கொண்டவள்; அதாவது உள்ளூர அவளறியாமலே இயற்கை அந்த வேலையில் அவளைத் தூண்டியது. அவரது வார்த்தைகள் அவளது வாலிப அழகின் முகத்திலடித்தன. அவரைக் கவர்ச்சிக்கக்கூடிய படியெல்லாம் தனது பெண்மைக் குணங்களைப் பயன்படுத்துகிறாள். சுப்புவையர் மசிகிற பேர்வழியாகத் தெரியவில்லை. கலியாணியும் ஒரு பெண்ணாயிற்றே, அவளுக்கும் இயற்கையின் தேவையும் தூண்டுதலும் இருக்குமே என்ற ஞானம் சிறிதும் கிடையாது போயிற்று சுப்புவையருக்கு.

அப்பொழுது சைத்ரிகனான சுந்தா சர்மா அங்கு வந்தான்.

III

அப்பொழுது முன் வேனிற்காலம். பனி நீங்கிவிட்டது. வாய்க்காலில் ஜலமும் வற்றிவிட்டது. பயிர்கள் அறுவடையை எதிர்பார்த்துத் தலைசாய்ந்து நின்றன. குளத்தில் நீர்வற்ற இன்னும் இரண்டு மூன்று மாதமாகும். ஊருக்குக் குடி தண்ணீர் குளத்திலிருந்து தான், அதாவது ஆற்றிற்கு நடக்க முடியாதவர்களும், நடக்கப் பிரியமில்லாதவர்களும், குளத்திலேயே ஜலம் எடுத்துக் கொள்ளுவார்கள்.

சுந்தா சர்மா அக்ராகாத்தில் ஒரு காலிக் குச்சு வீட்டில் வாடகைக்கு இருந்துகொண்டு, சாப்பாட்டிற்குச் சுப்புவையர் வீட்டில் வாடிக்கை வைத்துக் கொண்டான். வரும்பொழுது அவன் மனம் களங்கமற்ற, மத்தியான வானம் போல் இருந்தது. எப்பொழுதும் குளக் கரையிலோ அல்லது வாய்கால் கரையிலோ இருந்துக்கொண்டு, இரண்டு மூன்று மாட்டுக்காரப் பையன்கள் வேடிக்கைப் பார்க்கச் சித்திரம் தீட்டிக் கொண்டிருப்பது அவரது பொழுது போக்கு.

மத்தியானம் சாப்பாட்டிற்கு வர சில சமயங்களில் இரண்டு அல்லது மூன்று மணியாகிவிடும். சில சமயம் காலைச் சாப்பாடு இல்லாமலே சென்று விடுவார். வருவது எந்த நேரமென்பதில்லை.

கலியாணி அவனைத் தனது சகோதரன்போல் பாவித்து வந்தாள். ஆனால் உள்ளம் அவனைக் கண்டவுடன் பயத்தினால் சலிக்கும். அவன் வந்து இரண்டு மூன்று நாட்களுக்கு அவனுக்குச் சாப்பாடு போடுவது என்றால் வியர்த்து விருவிருத்து, முகஞ் சிவந்து விடுவாள். காரணம் சர்மா வாணீதாச புரத்தினரைப்போல் அல்லாது, சற்று நாகரிகமாகவும், சுத்தமாகவும் உடையணிந்துக் கொள்வதுதான். ஆனால் அவனது கிராப்புத் தலை கழுத்துவரை வளர்ந்து மறைத்திருந்தாலும், எப்பொழுதும் சிர் குலைந்தே முகத்திலும் காதிலும் கிடக்கும். கருத்த கண்கள்; எப்பொழுதும் எதையோ சிந்தித்துக் கொண்டிருப்பது போல எதையாவது நோக்கற்றுப் பார்த்துக் கொண்டிருக்கும்.

சர்மா சைத்திரிகனாக இருந்தும் கலியாணியைப் பார்க்காதது ஆச்சரியம் என்று நினைக்கலாம். கனவுகள் அழுத்தும் உள்ளத்தைக் கொண்ட அவன், சுப்புவையரின் இல்லத்தை மறைமுகமான ஹோட்டலாகக் கருதியதினால் சாப்பாடு முடிவது என்பது அவன் அறியாதே நடந்தேறின. மேலும் சுப்புவையரின் வீடு, ஜன்னல்களுக்குப் பெயர்போனதல்ல, காற்றும் ஒளியும் உள்ளே எட்டிப் பார்க்கக்கூடாது சங்கல்பம் செய்துகொண்ட சுப்புவையர் மூதாதைகளில் ஒருவரால் கட்டப்பட்டது. பகலில் இருட்டு, இரவில் குத்துவிளக்கின் மங்கலான இருட்டு. சாதாரண காலத்திலேயே எதிரில் வருவது என்னவென்று உணர்கிற பழக்கமில்லாத சர்மாவிற்கு, இவ்வளவு வெளிச்ச உதவிகளும் சுப்புவையரின் மனைவியை அவருக்கு மறைத்துவிட்டால் அதிசயமல்ல. மேலும் கலியாணிக்கு அதிகமாக வெளியில் நடமாடும் பழக்கம் கிடையாது. பொந்துக் கிளி. மேலும் குளம் வாய்க்கால்களுக்குக் கருக்கலிலேயே போய்வந்து விடுவாள். இதனால் சர்மா கலியாணியைத் தினம் சந்தித்தாலும் பார்த்தது கிடையாது. அவருக்கு அவளைப் பொருத்தவரை, உணவு பரிமாறும், கருவளை யணிந்த கைகள் மட்டிலும் தெரியுமோ என்னவோ.

## IV

அன்று சுந்தா சர்மா, வருவதற்குச் சாயுங்காலமாகி விட்டது. காலையிலேயே சென்றவர், மத்தியான போஜனத்திற்குக்கூடத் திரும்பவில்லை. வரும் பொழுது நன்ருக இருட்டிவிட்டது. வரும் வழியிலேயே குளத்தில் குளித்து விட்டு நோாகத் தமது குச்சு வீட்டிற்குச் சென்று உடைகளை மாற்றிக்கொண்டு, சுப்புவைய்யரின் வீட்டை யடைந்தார். அன்று அவருக்குப் பசி.

சுப்புவையர் வெளித் திண்ணையில் உட்கார்ந்திருந்தால் இவரைக் கண்டதும், “ என்ன அய்யாவர்கள் பகலிலே கூட சாப்பிடல்லே என்று சொன்னுளே; இப்படியிருந்தா உடம்பு என்னத்துக்கு ஆகும்? அடியே, சர்மா வந்திருக்கார்,இலேயைப்போடு; இன்னும் விளக்கை ஏன் ஏற்றிவைக்கவில்லே; நேக்குத் தெரியுமே! அவள் இருந்தா வீடு இப்படிக் கிடக்குமா, பகவான் செயல்” என்று சொல்லிக்கொண்டே உள்ளே சென்று, குத்துவிளக்கிற்கு மேல் இருக்கும் மாடக்குழியில் தீப்பெட்டியைத் தேடினர்.

சமயல் உள்ளிருந்த கலியாணியும் கையில் அகல் விளக்குடன் வந்து குத்துவிளக்கை ஏற்றினள்.

“ ஏன்னடி விளக்கை ஏன் ஏற்றக் கூடாது? இவ்வளவு நேரமும் என்ன பண்ணினே !”

“ ஏற்றினேனே. மங்கியிருக்கும் திரியைத் தூண்டாதிருந்து விட்டதினுல் அணைந்து விட்டது. சோத்தை வடிச்சுண்டிருந்தேன் ” என்ருள் கலியாணி.

“ சரி, சரி எனக்குத் தெரியுமே; வீடும் வாசலும் கெடக்கிட கெடையைப்பார்த்தால் நன்னுயிருக்கு, பெருக்கிவிட்டு, சீக்கிரம் இலேயைப்போடு,” என்ருர்.

கலியாணியின் முகம் சிவந்தது. அன்னியர்கள் முன்பாகவும் இம்மாதிரிப் பேசுகிருரே என்று அவள் உள்ளங் கலங்கியது. ‘அவர் என்ன நினைப்பார்’ என்ற நாணம், இவரது சுறுக்குச் சுறுக்கென்று தைக்கும் வார்த்தைகள், அவள் உள்ளத்தைக் குழப்பிவிட்டது. சரேலென்று உள்ளே சென்றுவிட்டாள். அவளுக்கு அழுகை அழுகையாக வந்தது.

“ இன்று எங்கே போயிருந்தீர்கள் ?” சுப்புவையர்.

“ அணைக்கட்டுப் பக்கம் போயிருந்தேன். வேலை முடிவதற்கு நேரமாகி விட்டது, மத்தியானம் வெய்யலில் வருவானேன் என்று நினைத்தேன். நாளைக்கு அல்லது மறுநாளைக்குக் கொழுந்து மாமலைப் பக்கம் போகலாம் என்று நினைக்கிறேன். போவதை இப்பொழுதே சொல்லிவிட்டால் நீங்கள் காத்திருக்க வேண்டியதில்லே. யல்லவா !” என்று சிரித்தார் சர்மா.

இதற்குள் கலியாணி கதவு வோாத்தில் நின்றுகொண்டு, “ என்ன செய்றேள். சொம்பில் ஜலம் வைத்திருக்கிறேன் ” என்ருர்.

“ இந்தாருங்கள் கால் கைகளைக் கழுவிக் கொள்ளுங்கள் ” என்று அவரிடம் ஒரு சொம்பு ஜலத்தைக் கொடுத்துவிட்டு, தானும் கால் முகம் கழுவினர்.

இருவரும் உள்ளே சென்று குத்து விளக்கின் முன்பு போடப்பட்டிருந்த இலேயில் உட்கார்ந்து கொண்டனர்.

அன்று இருவருக்கும் பரிமாறுவதென்ருல் பிராணன் போவது போலிருந்தது.

முதலில் சுப்புவையருக்கும் சாதத்தைப் படைத்தாள். கை நடுங்கியதினுல் சிறிது சிதறிவிட்டது.

“ எனக்குத் தெரியுமே இப்படிச் சிந்திச் சிதறினுல் வாழ்ந்துவிடும். பார்த்துப் போடக்கூடாதா. போதும் போதும்” என்ருர். பிறகு மனதிற்குள்ளாகவே, “அவள் இருந்தால், கர்ம பலன்” என்று முனகிக்கொண்டார். இவ் வார்த்தைகள் கலியாணிக்குக் கேட்டது. ஏற்கனவே குழம்பிய மனம் கலங்கி விட்டது. கைகள் இன்னும் அதிகமாக நடுங்குகின்றன.

சர்மவிற்குப் படைப்பதற்காகக் குனிந்தாள். பதற்றத்தில் தட்டத்திலிருந்த சாதம் முழுவதும் இலையில் கவிழ்ந்துவிட்டது. சர்மா ‘போதும்’ என்று இடை மறித்தார். அவரது புறங்கை மீது ஒரு குவியல் மட்டும் தடைப்பட்டு நின்றது. ‘போதும்’ என்று சொல்லிக் கொண்டிருக்கும் பொழுதே தட்டிக் கொண்டிருக்கும் பிரகிருதி அசடா அல்லது அதற்குக் குறும்பா என்று நோக்கினர். அவர் சற்று அண்ணாந்து பார்த்ததும் அவர் எதிர் பார்த்ததற்கு விபரீதமான ஒரு காட்சி. பயம், கூச்சத்திலும், குத்து வார்த்தைகளிலும் ஏற்பட்ட பயம், என்பது முகத்தில் எழுதி ஒட்டியதுபோல் மிரண்ட பார்வைகள்.

இவர் பார்த்ததும் அவளுக்கு இன்னும் மிரட்சி யதிகமாயிற்று.அந்தக்குழப்பத்தில் அவர்கள் கைகள் சந்தித்தன. அவள் கண்களில் ஆறுதலை எதிர்நோக்கும் குழந்தையின் வருத்தம்; அழுகை துடித்துக்கும் உதடுகள். ஒரு கணம் இருவரும் ஒரே பார்வையில் அசைவற்றிருந்தார்கள்.மறுகணம் அவள் நிமிர்ந்து திரும்பிப் பாராது வேகமாக உட்சென்றுவிட்டாள். சர்மாவின் உள்ளத்தில் அது ஒரு விலக்க முடியாத சித்திரமாகப் பதிந்தது.

மறுபடியும் கலியாணி எத்தனையோ தடவை வந்து பரிமாறினுள். ஆனுல் ஒரு கணமாவது சர்மாவைப் பார்க்கவில்லை. ஆனுல் சர்மா அவளது உள்ளத்தைத் துருவும் பார்வைகளைச் செலுத்தினுர். அவை பாறைகளில் பட்ட கல்போல் பயனற்றுப் போயின. அவருக்கு, ‘காரணம், காரணம்’ என்று உள்ளம் அடித்துக் கொண்டது. சாப்பிட்டு விட்டுப் பேசாது நேரே தனது குச்சு வீட்டிற்குச் சென்று தனது உள்ளத்துடன் போராடிக் கொண்டிருந்தார். அவரது உள்ளம் கலியாணியைத் தன்னுள் ஐக்கியமாக்கியது. அவளது அழகு சர்மாவின் சைத்ரிகக் கண்களுக்குப் பல நீண்ட காவியங்களாகத் தோன்றின. அன்று இரவு முழுவதும் அவன் தூங்கவில்லை; தனது கனவுகளுடன் போராடிக் கொண்டிருந்தான்.

* * *

அன்று சாப்பாடு முடிந்தவுடன் சுப்புவையர் வெற்றிலைச் செல்லத்தை வெளியே எடுத்துக்கொண்டு, வெளியே வந்து உட்கார்ந்து கொண்டு வெற்றிலே போடலாம் என்று பெட்டியைத் திறந்தார். வெற்றிலே பாக்கு எல்லாம் இருந்தது. ஆனுல் சுண்ணும்பு மட்டும் காய்ந்து காரைக்கட்டியாக விருந்தது. ‘ஜடம்’ என்று கூறிக் கொண்டே, “ அடியே !” என்று உள்ளே தலையை நீட்டிக்கொண்டு கூப்பிட்டார். சமயல் உள்ளில் தனது மனதுடன் போராடிக் கொண்டிருந்த கலியாணி ‘என்ன’வென்று கொண்டே வெளியில் வந்தாள்.

“அடே ஜடமே! உனக்கு எத்தனை நாள் சொல்லுவது, செல்லத்தில் எல்லாம் சரியாயிருக்கிறதா வென்று பார்த்துவை என்று? மூன்ருவது இல்லேயே. அர்த்தாத்திரியிலே யார் கொடுப்பாரகள்? போய் ஒரு துளி ஜலம் எடுத்துண்டுவா. ஒன்னைக் கட்டிண்டு அழாதெவிட ஒரு உருவத்தைக் கட்டிண்டு மாரடிக்கலாம். தொலை! சீக்கிரம். அவளும் போனுள், குடியும் குடித்தனமும் எல்லாம், சொல்ல வேண்டியதில்லே” என்று வைதார்.



கலியாணி உள்ளே சென்று ஒரு டம்ளரில் ஜலம் கொண்டுவந்து வைத்து விட்டு, அவரது பாயையும் தலையணையையும் எடுத்து உதறிக் கூடத்தில் விரித்துவிட்டு மறுபடியும் உள்ளே சென்றுவிட்டாள்.

அன்று பசிவேறு வரப்போகிறது! அவள் மனம் எங்கெல்லாமோ சுற்றியது. சர்மாவைப்பற்றி அடிக்கடி அவளை யறியாமல் அவள் உள்ளம் நாடியது. ஆனுல் தனது கணவன் அன்னியர் இப்படி முன்பும் இப்படிப் பேசுகிருரே என்ற வருத்தம். ஏங்கி ஏங்கி யழுதாள். அழுகையில் ஒரு ஆறுதல் இருந்தது போல் தெரிந்தது.

மறுபடியும் ‘அடியே’ என்ற சப்தம். “என்ன” வென்று கேட்டுக் கொண்டே எழுந்து சென்ருள்.

“இன்னும் சாப்பிட்டு முடியவில்லேயா, இந்தா! இந்தக் காலேப் பிடி! அப்பா! முருகா! சம்போ சங்கரா!” என்று கொட்டாவி விட்டுக் கொண்டே பாயில் பாயில் படுத்துக் கொண்டார்.

உட்கார்ந்து கொண்டு மெதுவாகக் காலேப் பிடித்துக் கொண்டே இருந்தாள். அவள் கலங்கிய கண்களிலிருந்து ஒரு சொட்டு அவரது முழங்காலில் விழுந்தது.

“என்னடி மேலெல்லாம் எச்சல் பண்ணாய். ஒழுங்கும் தெரியல்லெ என்ன ஜன்மமடா ?” என்ருர்.

கலியாணி சற்றுநேரம் மௌனமாக இருந்தாள். அவரிடம் ஒன்று கேட்க வேண்டுமென்று துணிச்சல் பிறந்தது.

“பாருங்கோ !” என்ருர்.

“உம்! போதும். பிடித்தது,” என்ருர் ஐயர்.

அவரது கையை மெதுவாக எடுத்துத் தன் மார்பின்மீது வைத்துக் கொண்டு, “அவாள் முன்னெல்லாம் என்னைப் பேசுகிறீர்களே! நான் என்ன செய்து விட்டேன்” என்று சிரிக்க முயன்ருள். கண்களிலிருந்து கண்ணீர் வந்தது. அவளது புன்னகை பரிதாபகரமாக விருந்தது.

“எதற்காக? உனக்குப் புத்திவரத்தான். என்ன சொல்லியும் ஒன்றும் உறைக்கவில்லேயே. அவள் இருந்தாளே ஒரு குறையுண்டா. எல்லாம் கணக்கா; கிரகலட்சுமி என்ருள் அவள் தான். சொன்னுல் போதுமா ?”

“ அவள், அவள், என்கிறீர்களே? நான் என்ன செய்துவிட்டேன். இப்படித் திரும்பிப் பாருங்கள். இப்படி இருக்கும் பொழுது சொன்னுல் கேட்க மாட்டேனே!”

“கையை விடு! எனக்குத் தூக்கம் வருகிறது. என்னைப் படுத்தாதே!” என்று சொல்லிவிட்டு சுவர்ப்புறம் திரும்பிக்கொண்டு குறட்டை விடலானர்.

கலியாணிக்கு நெஞ்சில் சம்மட்டியையடித்ததுபோல் இருந்தது. தனது ஸ்பரிசம், என்ன சிறிதாவது அவரை மனிதனுக்கவில்லேயே என்றதில் ஒரு ரோஷம், சிறிது கோபம் கூட. அன்று முழுவதும் அவளுக்குத் தூக்கமே வரவில்லே. அவளது உள்ளம் எண்ணங்களுடன் போராடிக் கொண்டிருந்தது.

அன்று முழுவதும் கலியாணிக்குத் தூக்கம் வரவில்லை. தூாத்திலே, எங்கிருந்தோ ஒரு வெளிச்சம் தன்னை யழைப்பது போல், ஓர் உணர்வு. அது தன்னை வாழ்விக்குமோ அல்லது தன்னைத் தகித்து விடுமோ என்ற பயம் அவளைத் தின்று கொண்டிருந்தது.

தன் கணவன் தன்னிடம் என்ன குறைகண்டார்; ஏன் இப்படி உதாசீனமாக இருக்கவேண்டும். அதற்குக் காரணம் தனது குறையா அல்லது அவரது,............அவருக்குக் குறை எப்படிச் சொல்ல முடியும்?

இப்படியே அவள் அன்று முழுதும் தூங்கவில்லை. பயலில் படுத்துப் புரண்டுக்கொண்டு இருந்தாள். சற்று ஒரு புறமாகப் புரண்ட சுப்புவையர் பிரக்ஞையில்லாது கையைத் தூக்கிப் போட்டார். அது அவளது மார்பில் அம்மிக் குழவி மாதிரி பொத்தென்று விழுந்தது. தூக்கம் கலைந்தது. பயம். பிறகு புருஷனின் கைதான் என்ற உணர்ச்சி; அதில் ஒரு சாந்தி பிறந்தது அந்த போதையில் அவளுக்குக் கண் கறங்கியது. தூங்கிவிட்டாள். நடைமுறை உலகத்தில் இல்லாவிட்டாலும் கனவு உலகத்திலாவது அன்று அவளுக்குக் கணவன் சிரித்த முகத்துடன் பேசிக் கொண்டிருப்பது போல் தோன்றியது.

அன்று கலியாணி எழுந்திருக்கும் பொழுது என்றும் போல் அல்லாமல் வெகு நேரமாகிவிட்டது. எழுந்ததும் குடத்தை எடுத்துக்கொண்டு நோாகக் குளக்கரைக்குச் சென்ருள்.

## IV

அன்று இரவு முழுவதும் சுந்தா சர்மாவிற்குத் தூக்கம் பிடிக்கவில்லை என்ருல் வியப்பல்ல. இத்தனை நாட்களும் தமது மனத்திறையை விலக்கி அவளைப் பார்க்காததற்கு ஆச்சரியப்பட்டார். அந்த ஆச்சரியம் அவரை எங்கெங்கோ இழுத்துக்கொண்டு சென்றது. அவரும் சைத்ரிகன்—அழகுத் தெய்வத்தின் அடிமை. கலியாணியின் சோகம் தேங்கிய கண்கள் அவருக்குக் கற்பனைக் கதையாய், காவியமாகத் தெரிந்தது. அன்று இரவு முழுவதும் உள்ளம் கட்டுக் கடங்காமல் கொந்தளித்தது.

சுப்புவையர், பாவம், அது ஒரு பிரகிருதி. அவரது வசம் கலியாணி பிணிக்கப்பட்டால் விதியின் அற்பத்தனமான லீலைகளை உடைத்தெறிய ஏன் மனம் வாராது? அவளை மனிதனுகவே சர்மா நினைக்கவில்லை. அவரது சிறையில் இருந்து அவளை விடுவிக்க வேண்டும் என்று அவர் நினைத்தார். அதில் கல்யாணியின் சம்மதம்,—அதைபற்றிக் கூட அவருக்கு அதிகமாகக் கவலையில்லை.

அவளை யழைத்துக்கொண்டு சென்றுவிட்டால்.....................வாழ்க்கை எவ்வளவு இன்பமாக இருக்கும்! இலட்சியத்திற்கு அவள் எவ்வளவு பெரும் ஊக்கமாக விருப்பாள். மனிதப் புழுக்களே இல்லாத, மனிதக் கட்டுப்பாடு அற்ற, அதன் நாகரிகம் என்ற துர்நாற்றம் வீசாத கானகத்தில் வாழ்க்கையையே ஒரு இன்பப் பெருங் கனவாகக் கழித்தால் என்ன?

அன்று முழுவதும் அவரது உள்ளத்தில் ஓடிய எண்ணங்கள் ஒரு பித்தாப் பைத்தியக்காரனுடைய உன்னத்

தையும் தோற்கடித்துவிடும். இரவு முழுவதும் விளக்கு அணைக்கப்படவில்லை. மூலையில் சன்னலை யொட்டியிருந்த நாற்காலியில் உட்கார்ந்து கொண்டு, விளக்கையே கவனித்துக் கொண்டிருந்தார். விளக்கின் சிம்னி கரி பிடித்து மேலே புகை யடைந்து வெளிச்சத்தை யமுக்கியது. இரண்டு நிமிஷம் விளக்கு பக்பக் என்று குதித்தது. அவ்வளவுதான். விளக்கும் அணைந்து விட்டது.

அறை முழுவதும் இருட்டு. உள்ளே உட்கார்ந்திருக்க முடியவில்லை. மேல் வேஷ்டியை எடுத்துப் போட்டுக் கொண்டு வெளியே சென்றார். விடிந்து விட்டது. ஆனால் நட்சத்திரங்கள் மறையவில்லை. கிழக்கே சற்று வெளுப்பு, —வெள்ளைக் கீறல் மாதிரி.

சர்மாவிற்குக் காலையில் நடப்பது மனதிற்கு நிம்மதியாக விருந்தது. அவர் வாய்க்கால் கரை வழியாகவே நடந்து கொண்டிருந்தார். சற்று தூரம் சென்றவுடன் வயல் வரப்புகளின்மீது நடக்க வாரம்பித்தார். தேகம்தான் ஏதோ யந்திரம் மாதிரி நடந்துக்கொண்டிருந்தது. மனம் மட்டும் தங்கு தடையின்றி கலியாணியின் பின்சென்று விட்டது. "கலியாணியை அழைத்துச் சென்றுவிட்டால்? அதற்கு இசைவாளா? அதற்கு என்ன சந்தேகம்? பிறகு எங்கு போவது? எங்குபோனால் என்ன? மனிதன் இருக்கும் இடத்தைத் தவிர......."

சூரியோதயமாகி விட்டது. முகத்திற்கு நேரே வெய்யில் விழுந்து கண் கூச வாரம்பித்ததும் சர்மாவிற்கு வெகு தூரம் வந்துவிட்டோம் என்ற எண்ணம் தோன்றியது. உடனே திரும்பி, குளத்தில் குளித்துவிட்டுப் போவது என்று அப்பக்கமாகத் திரும்பி நடந்தார்.

வெய்யிலின் சூடு நிமிஷத்திற்கு நிமிஷம் அதிகமாகிறது. முதுகு பொசுக்கப்படுவதுபோல் நிமிஷத்திற்கு நிமிஷம் அதிகமாகும் காலை வெய்யிலில், முதுகு தீய்ந்தது.

"அப்பா!"

குளக்கரை வந்துவிட்டது. குனிந்து கொண்டு மேட்டில் ஏறி, கரையின்மீது வளர்ந்திருந்த மரத்தடியில் நின்று முகத்தைத் துடைத்துக் கொண்டார். இரண்டு மூன்று வினாடிகளில் கண் கூச்சம் விலகியது. குளத்தில் யாருமில்லை.

யாருமில்லையா?

மரத்தின் மறைவில் ஜலத்தில் நின்று கலியாணி, தனது ஈரப் புடவையைப் பிழிந்து உடுத்திக்கொண்டு இருந்தாள். ஈரம் சொட்டும் கூந்தல் முதுகை மறைத்தது. கன்னத்திலும், தோளிலும், குளக்கரையில் இருந்த, நன்றாக விளக்கப்பட்ட குடத்திலும், கிளைகளின் ஊடு பாய்ந்த சூரியவொளி பிரதிபலித்து மின்னியது. அப்பா! வர்ணப் பெட்டியும் படம் எழுதும் திரைச் சீலையும் எடுத்து வரவில்லையே என்று நினைத்தார் சர்மா. கலியாணிக்கு இவர் இருப்பது தெரியாது. தனிமை என்ற மனமறைவில் தனது ஈரப் புடவைகளை எடுத்து உதரிக் கொசுவி உடுத்திக் கொண்டாள். ஈரப் புடவையில் நின்ற அழகு அவருக்கு மஜூம்தாரின் சித்திரத்தை நினைவூட்டியது. குனிந்து குடத்தை எடுத்து இடுப்பில் வைத்துக்கொண்டு கரையேறுவதற்குத் திரும்பினாள். அவள் முன்பு சர்மா வைத்த கண் மாறாமல் பார்த்திருப்பதைக் கண்டதும் திகைத்து விட்டாள். முகம் முழுவதும் சிவந்து விட்டது. கண்கள் மிரண்டு அவரையே வெறித்து நோக்கின.

போவது என்றால் அவரைக் கடந்து போகவேண்டும். மனம் குழம்பியது. என்ன செய்வது? என்ன செய்வது? வெட்கம் தலைகுனியச் செய்துவிட்டது.

சர்மாவிற்கு அவளிடம் பேசவேண்டுமென்ற ஆசை. எப்படிப் பேசுவது? என்ன சொல்லுவது?

"நான் இன்று கொழுந்துமாமலைப் பக்கம்போகிறேன். நேற்றைபைப்போல் இன்றைக்கும் பட்டினியாக இருந்து விடாதீர்கள்? நான் வாராவிட்டால் பட்டினி இருப்பதாவது? அதென்ன பைத்தியக்காரத்தனம்?" என்று சிரித்தார். அவர்கள் உள்ளம் இருந்த நிலைக்கு இம்மாதிரியான பேச்சு அபாயகரமான துறைகளிலிருந்து விலகி நிம்மதியை அளிப்பதுபோல ஒரு பிரமையை உண்டுபண்ணியது.

கலியாணிக்கு இவ்வார்த்தைகள் சற்றுத் தைரியத்தை யளித்தன. அவரிடம் பேசுவதற்கு மனம் ஆவல்கொண்டது. உள்ளத்தின் நிம்மதி கன்னத்தின் சிவப்பைச் சிறிது குறைத்தது.

"ஆண் பிள்ளைகள் சாப்பிடுமுன் கொட்டிக்கொண்டு, அவாளுக்குக் கல்லையும் மண்ணையுமா போடுவது? இப்பவே போறேளா? காலையிலே ஏதாவது சாப்பிட வேண்டாமா? அங்கு சாப்பாட்டிற்கு..........." என்றாள்.

"இப்பொழுது சாப்பிட வருகிறேன். மத்தியானத்திற்கு என்ன? அதை நான் பார்த்துக் கொள்ளுவேன். ஏது இவ்வளவு நேரம், எப்பொழுதும் கருக்கலிலேயே ஸ்னானம் ஆய்விடுமே?" என்றார்.

அதற்கு அவள் ஒன்றும் பதில் சொல்லவில்லை. அவள் முகம் மறுபடியும் சிவந்தது. இரவு பட்ட வேதனையும் ஓடிய எண்ணங்களும், மறுபடியும் அவள் மனதில் தோன்ற வாரம்பித்தன.

அவரைப் பரிதாபகரமாகப் பார்த்துவிட்டுக் கரையேறி வீட்டை நோக்கி நடந்தாள். அவரைத் தாண்டிச் செல்லும்பொழுது அவளது ஈரப்புடவை அவர்மீது பட்டது. சர்மாவிற்கு அவளை அப்படியே பிடித்து ஆலிங்கனம் செய்யக் கரங்கள் துடித்தன. ஆனால் தமது கனவுக்கோட்டை இடிந்து பாழாகிவிட்டால் என்ற பயம்தான் அவரைத் தடுத்தது.

சர்மா குளித்துவிட்டு நேராகக் கலியாணியின் வீட்டை யடைந்தார். அப்பொழுது சுப்புவையர் கோவிலுக்குச் சென்றுவிட்டார். வீட்டில் கலியாணியைத் தவிர வேறு ஒருவருமில்லை.

இவ்வரவை எதிர்பார்த்திருந்த கலியாணி, இலையைப் போட்டுச் சுடுசாதம் எடுத்து வைத்தாள்.

"என்ன! ஏது அதற்குள் சமயலாகிவிட்டது? ஏன் இவ்வளவு அவசரம்!" என்றார் சர்மா. அவருக்குச் சாப்பாடு செல்லாததற்குக் காரணம் பசியின்மையல்ல.

"இன்னும் கொஞ்சம் வாங்கிக் குழம்பு போட்டுச் சாப்பிடுங்கள்" என்றாள் கலியாணி. அன்று அவளுக்கு வாய்ப்பூட்டு திறக்கப்பட்டமாதிரி இருந்தது. அவரிடம் பேசுவதில் ஒரு ஆறுதல்.

"காலையில் சுடுசாதம் சாப்பிடமுடியுமா? அவர் எங்கே? கோவிலுக்குப் போயிருக்கிறாரா? எப்பொழுது வருவார்? கொஞ்சமாகப் போடுங்கள், போதும்" என்றார்.

சாப்பாடு முடிந்தது கைகழுவ ஜலம் வெளியில் வைக்கப்படவில்லை. பாத்திரத்தை எடுத்துக்கொண்டு சமையலறைக்குள் சென்ற கலியாணி வரச் சிறிது



தாமதமாயிற்று. சர்மா பின்புறம் சென்று கை கழுவிக்கொண்டு, சமையலறைப்பக்கம் இருந்த தாழ்வாரத்தின் பக்கம் வந்தார்.

"ஐயோ! ஜலம் வைக்க மறந்து விட்டேனே! இந்தாருங்கள், இதை மத்தியானத்திற்கு வைத்துக்கொள்ளுங்கள்," என்று ஒரு சிறு பொட்டலத்தைக் கையில் கொடுத்தாள்.

"இதென்ன? எனக்கு ஒன்றும் வேண்டாம் என்றேனே," என்றார்.

"தோசை. கொஞ்சம்தான் வைத்திருக்கிறேன். மத்தியானம் பூராவும் பட்டினியிருக்கவாவது?" என்றாள் கலியாணி.

அதை எடுத்துக்கொள்ள வேண்டும் என்று கெஞ்சுவதுபோல் அவளது கண்கள் நோக்கின.

'கலியாணி' என்று கம்மிய குரலில் அவளை யழைத்துவிட்டு, அப்படியே இழுத்து ஆலிங்கனம்செய்து அதரத்தில் முத்தமிட்டார். கலியாணியும் கட்டுண்ட சர்ப்பம்போல் தன்னை யறியாது கொந்தளித்த உள்ளத்தின் எதிரொலிக்குச் சிறிது செவி சாய்த்து விட்டாள். பிரக்ஞை வந்ததுபோல் நடைமுறைச் சம்பிரதாயங்கள் அவளைத் தாக்கின.

தனது வலிமையற்ற கைகளால் பலமுள்ளவரை தெட்டித் தள்ளிவிட்டு, முகத்தைத் திருப்பிட்டு, "என்னை விட்டு விடுங்கள்" என்று பதறினாள்.

சர்மா தமது கைகளை நெகிழ்த்தார். கலியாணி விலகி நின்றுகொண்டு, "என்ன போங்கள்!" என்று அவரைத் தண்டிப்பதுபோல் நோக்கினாள்.

சர்மா, "கலியாணி நான் சொல்வதைக் கேள்" என்று மறுபடியும் நெருங்கினார். கலியாணி சமயலறைக்குள் சென்று தாளிட்டுக் கொண்டாள். உள்ளிருந்து விம்மிவிம்மி யழும் குரல் கேட்டது.

"கல்யாணி!" பதில் இல்லை.

சர்மாவும் கலங்கிய உள்ளத்துடனும் குழம்பிய சித்தத்துடனும் வெளியே சென்றார். கொழுந்து மாமலைக்குச் செல்வது அவருக்கு நிம்மதியை யளித்தது.

V

கலியாணிக்கு அன்று முழுவதும் மனம் ஒன்றிலும் ஓடவில்லை. முதலில் பயம், தவறு என்ற நினைப்பில் பிறந்த பயம். ஆனால் சர்மாவின் ஸ்பரிசம் அவளது தேகத்தில் இருந்து கொண்டிருப்பது போன்ற நினைவு சுகமாக விருந்தது. அவளது உள்ளத்திரகஸியத்தில் சர்மாவின் ஆசைகள் எதிரொலித்தன.

அன்று முழுவதும் அவளுக்கு ஓரிடத்தில் இருக்கக் கொள்ளவில்லை. சுப்புவையர் மத்தியானம் வந்தார். அவருடைய இயற்கை பிரலாபத்துடன் போஜனத்தை முடித்துக் கொண்டு

புதுச்சேரி மேயர் திரு. ஜோசப் டேவிட். கண்ணியமும் பொறுப்பும் வாய்ந்த இக்கௌரவ பதவிக்கு முதலாவது வந்த இந்தியர் இவரே.

—P.P.B.

படுத்து நித்திரை செய்ய வாரம்பித்தார்.

கலியாணிக்கு அவரைப் பார்க்கும் பொழுதெல்லாம் பரிதாபமாக விருந்தது. தன்னை 'மூத்தாளைப் போல்' இருக்கவில்லை என்று வைதாலும் தன் மீது ஓர் அந்தரங்கமான, நம்பிக்கை வைத்திருப்பதால் அதை மோசம் செய்வதா என்று எண்ணினாள்.

கல்யாணியின் மனம் இரண்டையும் ஏககாலத்தில் பிரிய மனமில்லை. வீடு, பேச்சு, சம்பிரதாயம் இதை எல்லாம் உடைக்க மனம் வரவில்லை. சுப்புவையரை ஏமாற்றவும் மனம் துணியவில்லை. இருளில் வழி தெரியாது தவிக்கும் பாதைசாரி, ஏதாவது ஒன்றைத் தனது நம்பிக்கைக்குப் பாத்திரமானது என்று சங்கல்பித்துக்கொண்டு அதை நோக்கிச் செல்லுவதுபோல், தனது கணவன் நித்தியம் பூஜை செய்யும் கோவிலுக்குச் சென்று தனது கலங்கிய உள்ளத்திற்குச் சாந்தியை நாடினாள். கோவில் மூலஸ்தானத்தின் இருளுக்கு இவளது மன இருள் தோற்றுவிட்டதாகத் தெரியவில்லை. மூலஸ்தானத்து மங்கிய தீப வொளியில் லிங்கம் தெரிவதுபோல் சர்மாவின் முகம்தான் அவளது அகத்தில் பிரதி பலித்துக்கொண்டு இருந்தது.

அன்று இரவு கலியாணி சுப்புவையரிடம் உட்கார்ந்து கால் பிடித்துக்கொண்டிருக்கும்பொழுது, அதிகாலையில் எழுந்து ஆற்றிற்குச்சென்று குளித்துவிட்டு வருவதற்கு அனுமதி கேட்டாள். காரணம் சர்மாவின் மீது ஆசை யிருந்தாலும் அவரைச் சந்திக்காதிருக்க வேண்டுமென்ற நினைப்பினால்.

"விடியற் காலத்தில் ஏன் ஆற்றிற்கு?" என்றார் சுப்புவையர்.

"குளத்தில் ஜலம் வற்றி நாற்றமெடுக்கிறதே என்று யோசித்தேன்" என்றாள்.

"சரி, சரி போய்ட்டு வாயேன்; அதெற்கென்ன கேள்விவேண்டியிருக்கு? நேக்குத் தூக்கம் வருகிறது. சும்மா தொந்திரவு செய்யாதே" என்று மறுபுறம் திரும்பிப் படுத்துக்கொண்டார்.

கலியாணிக்கு அன்று இரவு முழுவதும் உறக்கம் வரவில்லை. சர்மாவை நினைக்கும்பொழுது எல்லாம் ஒரு மகிழ்ச்சி, அவர் மறுபடியும் தன்னைத் தழுவ மாட்டாரா என்ற ஆசை.

இப்படியே தனது பொருளற்ற கனவுகளிடையே தூங்கினாள்.

* * *

கொழுந்து மாமலைக்குச் சென்ற சர்மாவிற்கு வேலை ஓடவில்லை. அன்று முழுவதும் கலியாணி என்ன நினைப்பாளோ, அவளை மறுபடியும் எப்படிப் பார்ப்பது என்ற யோசனை. அன்று இரவு முழுவதும் காட்டிலேயே இருந்துவிட்டார். அப்பொழுதும் சாந்தி பிறக்கவில்லை. அதிகாலையில் சென்று சாமானை எடுத்துக் கொண்டு ஊரை விட்டே போய்விடுவது என்று நினைத்துக்கொண்டு திரும்பினார்.

கொழுந்து மாமலை ஆற்றிற்கு அக்கரையில் இருந்தது. ஊருக்கு வரவேண்டுமானால் ஆற்றைக் கடந்துதான் வரவேண்டும். மணி மூன்று இருக்கும் பொழுது ஆற்றங்கரையை யடைந்தார். மனதில் சாந்தி பிறக்கவில்லை. உள்ளம் பேய்போலச் சாடியது.

இன்னும் நன்ருக விடியவில்லை. ஆற்றில் யாரோ துணி துவைப்பது போலச் சப்தம். இவ்வளவு அதிகாலையில் அங்கு யார் வரமுடியும்?

"யாரது?" என்ருர்.

"யாரது?" என்ற பதில் கேள்வி பிறந்தது.

குனிந்து துவைத்துக்கொண்டிருந்த உருவம் நின்றது. ஒரு பெண். அதிலும்—கலியாணி!

"கலியாணி! நீ இங்கு,....இந்த நேரத்தில்! பயப்படாதே நான்தான் சர்மா!" என்ருர்.

"நீங்களா!"

அவள் சொல்லி முடியுமுன் சர்மா அவளை அப்படியே தழுவிக்கொண்டார். அவள் விலக முயன்ருள். இருவரும் தடுமாறி பாதி ஜலத்திலும் பாதி மணலிலும் விழுந்தனர். கலியாணியின் முகத்திலும் அதரத்திலும் மாறிமாறி முத்தமீந்தார். கலியாணி தடுக்கவில்லை. அவரது போக்கிற்கு எல்லாம் தடை செய்யவில்லை.

சற்றுநேரம் கழிந்தது.

"கலியாணி!" என்ருர்.

"என்ன?" வென்று மெதுவாகக் கேட்டாள் கலியாணி.

"என்னுடன் வந்துவிடு. இந்த மனித நாற்றமே அற்ற விடத்திற்குச் சென்றுவிடுவோம்" என்ருர் சர்மா.



"ஐயோடி! அது முடியாது." அந்த மங்கிய வெளிச்சத்திலும் அவளது மிரண்ட பார்வை மின்னியது.

"பிறகு..........?"

எனக்கு ஒன்றும் தெரியவில்லை. நீங்கள் சொல்லுகிற மாதிரி..........அதற்குப் பயமாக இருக்கிறது."

சர்மாவிற்கு உலகம் அர்த்தமற்ற கேலிக்கூத்து, போலும் அசட்டுத்தனம் போலும் பட்டது.

"கலியாணி நான் போகிறேன்" என்ருர்.

"எங்கே? போகவேண்டாம். இங்கேயே இருந்துவிடுங்கள்," என்ருள்.

"சீ! அது முடியாத காரியம். நீ என்னுடன் வா" என்று கையைப் பிடித்தார்.

"முடியாது!"

மறுபடியும் அக்கரைப் பக்கம் ஓர் மனித வுருவம் சென்று இருளில் மறைந்தது.

கலியாணியின் வாழ்க்கை அலையில் ஒரு குமிழி உடைந்து போயிற்று.

---

## நாட்டரசன்கோட்டை

ஸ்ரீ பாரதி வாசகசாலை

இவ்வூர் திரு. அண. ராம. அவர்கள் புதல்வி கண்ணுத்தாள் ஆச்சிக்கும், சோழபுரம் திரு. சேவு. ராம. அவர்கள் புதல்வன் முத்து பழனியப்பச் செட்டியாருக்கும் 6 2-35-ல் நடந்த திருமணத்தை முன்னிட்டு மேற்படி வாசகசாலைக்கு ரூ. 5 (ஐந்து) நன்கொடை உதவியுள்ளார்கள் என்றும் அவர்கட்கு தமது நன்றி உரியதாகுக என்றும் காரியதரிசி அறிவிக்கிருர்.

## திரு. ராம. சம்பந்தனுக்குப் பாராட்டு விருந்து

காரைக்குடி பாரதி பாடசாலையின் மாஜி மானேஜராகிய திரு. ராம. சம்பந்தன் அவர்கள் தொழில் முறைக் கருதி மலாய் நாட்டின் ஓர் அழகிய ஊராகிய ஈப்போவுக்குச் செல்வதை முன்னிட்டு, காரைக்குடி V. V. B. C. கிளப்பில் (8-2-35) வெள்ளியன்று காலை ஷெ கிளப் அங்கத்தினர்கள் ஓர் விருந்து நடத்திப் பிரிவு உபசாரம் செய்தார்கள் என்று திரு. பெ. கணபதி அவர்கள் அறிவிக்கிருர்கள்.

---

ஒரு மாணவன் சரித்திரப் பாடத்துக்கு 2 வாரமாக வாரமலிருந்தான். அவன் கடைசியில் பள்ளிக்கூடத்திற்கு வந்தபோது, கஜனி முகம்மது படையெடுத்து வந்ததைப்பற்றிய பாடம் நடந்தது.

உபாத்தியாயர்:—நீ ஊருக்கு எப்பொழுது போனாய்?

மாணவன்:—கஜனி முகம்மது பனிரண்டாம் முறை படை யெடுத்து வந்த பொழுது.

—ஏன், வி. வி. ஸி.





# புராண விநோதம்

(வைசம்பாயனன்)

ரொம்ப நாட்களாக நான் திருவாய் மலர்ந்தருளவில்லை—அல்ல, திருக்கை நாட்டியருளவில்லை யாதலால் புராண விநோதம் முற்றுப் பெற்றுவிட்டது என்று யாரேனும் எண்ணியதுண்டா! அப்படி நினைத்தால் அது தவறு. புராணவிநோதமாவது! முற்றுப் பெறுவதாவது! அதைப்பற்றி எழுத ஒரு மனித ஆயுள் போதாதே. அவ்வளவு இருக்கின்றன வண்டி வண்டியாக; இல்லை! இல்லை!! கப்பல் கப்பலாக. முன்னேதான் வண்டி பிரமாதம். இப்போது வண்டிக் கணக்கு எம்மாத்திரம்! புராணவிநோதம் நின்றதற்குக் காரணன் நான். தவறு என்னுடையது. என்ன போங்கள்! சோம்பேறித்தனந்தான் பிராணனை வாங்குகிறது! போகட்டும். இப்போது கொஞ்சம் புராணக் குப்பையைக் கிண்டுவோம். என்னை வரவேற்பவர் யாராவதிருந்தால் அவர்கள் மாலைகட்குப் பணத்தை வீணுக்குதல் வேண்டாம்; படித்து மகிழட்டும். சனி தொலைந்தது என்று நினைத்தவர் தங்கள் தலைவிதியை நினைத்து வருந்தட்டும்.

* * *

திருப்பாணுழ்வார் என்பவரை உங்கட்கெல்லாம் தெரியுமல்லவா? அவர் பெரிய விஷ்ணுபக்தர். அவர் தீண்டாத ஜாதி என்று கூறப்படுவோரைச் சேர்ந்தவர். அவரைத் திருவரங்கப் பெருமான் ஆலயத்துக்குள் விட்டுவிட்டார்; காந்தி இயக்கம் இல்லாத அந்தக் காலத்திலேயே. அதுவும் எப்படி? அதுதான் விநோதம். பாணுழ்வார் தாழ்ந்தவர் என்று கருதியவர்களுள் முதல் வரிசையில் நின்றவர் எந்த வகுப்பாரோ அவர்தம் பிரதிநிதியைத் திருப்பாணுழ்வார்க்குக் குதிரையாக்கி விட்டார் அரங்கநாதர். குற்றத்திற்குச் சரியான தண்டனைதான்! பிராமணைத் தமர்க்குக் கட்டளையிட்டுவிட்டார் கடவுள். "பாணுழ்வாரை நமது தோளில் எழுந்தருளுவித்து நமது ஆலயத்தை அடைக!" என்று ஆணை பிறந்தது. பிறகு என்ன? கடவுள் உத்தரவை மீறமுடியுமா? நடந்தது 'கருடசேவை!' பிராமணத் திருமேனியின் மீது தாழ்த்தப்பட்ட வகுப்பைச் சேர்ந்தவர் சவாரி செய்தார். திருவரங்கப் பெருநகரின் திருவீதி வழியே யாவரும் அறிய அரங்கநாதர் வாகனத்தில் ஆரோகணிக்கும் ஓர் புனிதமான இடத்தில், பாணுழ்வார் பிர்மாவின் திருமுகத்துதித்த முதற் குலத்து நாவாகனத்தின் மீது எருந்தருளிய காட்சியை—அந்தோ! நேரில் கண்டு அநுபவித்தோமில்லையே என்ற அடங்காத வருத்தம் சீர்திருத்த வாதிகட்கெல்லாம் இல்லாது போகாது. போகட்டும்! அதற்கு வருந்தி ஆவதொன்று மில்லையாதலால் கதையாவது இன்று இருப்பதற்கு மகிழலாம். பாணுழ்வார் தமது தாழ்ந்த திருமேனியோடு அரங்கநாதரோடு ஐக்கியப்பட்டு விட்டார்! அவர் தம் பாக்கள், புனிதமான நாலாயிரத் திவ்யப் பிரபந்தத்துள் புகுந்து கொண்டு விட்டன.

* * *

ஆனல் வைணவர்கள்தாம் அப்படியென்று நினைக்காதீர்கள். சைவர்களும் பரவாயில்லை. இவர்களும் ஒரு நந்தனரைக்கூடச் சேர்த்துக் கொண்டிருக்கிருர்கள். என்ருலும் பறையனை அப்படியே சேர்த்துக்கொள்ள முடியுமா? பாணன் வேடன் முதலியவர்களெல்லாம் ஏதோ போனல் போகிருர்கள்! பறையனை அந்தத் திருமேனியோடு.... சம்மதிக்கவில்லை! சைவ சீலர்களல்லவா! அது எப்படி முடியும்? எனவே ஒரு புதிய பிறப்பு! நந்தனரை நெருப்பில் போட்டுக் கொளுத்திப் பறச்சிறுமேனியைப் போக்கிப் பார்ப்பனத் திருமேனியைக் கொடுத்துவிட்டார் சைவச் சேக்கிழார்!

* * *

மனிதர்களும் மற்ற ஜீவராசிகளும் செத்துச் செத்துப் பிறக்கின்றனர் என நீங்கள் அறிவீர்கள். ஆனல் இத்தப்பெரிய கடல் என்ற ஒன்று இருக்கின்றதே; எப்போதும் பிசாசு மாதிரி ஓ வென்று அலறிக்கொண்டு. அதுகூட ஒருதரம் செத்துப்போய் விட்டது. பழயபடி புனர்ஜன்மம் எடுத்தது. தெரியுமா! அகஸ்திய முனிவர் என்று ஒரு குள்ள முனிவர் இருந்தார். உங்கட்கு நிச்சயமாக அவரைத் தெரிந்தே இருக்கும். ஏன்? அவருக்கும் உங்கட்கும் உறவு உண்டு. அவர்தான் உங்களுடைய தமிழைப்பெற்றவர்! ஆமாம்! அவரை எப்படி நீங்கள்—தமிழர்கள் தெரியா திருக்க முடியும். அவர் ரொம்பப் பொல்லாதவர் என்று தெரிகிறது. இந்தச் சின்னக் கடல் என்ற ஒன்றை அந்தக் குள்ளப் பெரிய முனி அப்படியே ஒரே மூச்சில் 'அபக்' கென்று குடித்து விட்டார். 'கடல் குடித்த முனி' என்று அவருக்குப் பெயர். பிறகு என்ன என்று கேட்கிறீர்களா? உலகத்தில் கடல் இல்லாது போய் விட்டது! கப்பல்களும் மகா மீன்களும் பிறவும் என்ன வாயிற்று என்று கேட்காதீர்கள். பின்னர் உலகத்தின் தேவையை உணர்ந்து தமது குட்டைத் திருமேனியின் வடிகால் வழியே கடல் நீரை விட்டருளினர் அகஸ்திய மகா முனி. அதனுல் தான் கடலுக்குச் 'சமுத்திரம்' என்று பேர் வந்ததாம். நல்ல வேளை! கடலை விட்டாவது தொலைத்தார்! இல்லா விட்டால் கடற்கரையின் இயற்கை இன்பத்தைக்கூட மக்கள் அநுபவிக்க முடியாமற் போயிருக்கும்!

# கல்லாக மாறும் மனிதன்

காலக் கிரமத்தில் நோய்கள் பலப்பல புதிது புதிதாகத் தோன்றிக்கொண்டிருக்கின்றன. எத்தகைய வைத்திய சாஸ்திர நிபுணர்களும் கற்றறியாத புது நோய்கள் அவ்வப்போது ஏற்படுவதாகக் கேள்விப்படுகிறோம். உலகை உற்று நோக்கும்போது எந்த டாக்டரும் வெறும் படிப்பைக்கொண்டு மாத்திரம் சிகிச்சை செய்துவிட ஏலுமென்று சொல்வதற்கில்லை. மூளையும் நுட்ப புத்தியுமே வைத்தியத்திற்குத் தேவை. இதுகாறும் பெரும்பெரும் வைத்ய சாஸ்திரிகள் 28 நோய்களைக் கண்டு பிரமித்துப் போயிருப்பதோடு அவை என்ன, எப்படி ஏற்படுகின்றன, அவற்றைப் பற்றி என்ன சொல்வது என்பதையே தெரியாமலிருக்கின்றார்களாம். அப்படிப்பட்ட ஆச்சரிய நோய்களில் ஒன்று கலிபோர்ணியாவில் சமீபத்தில் கண்டு பிடிக்கப்பட்டது. அங்கு ஒரு மாணவன் (ஆல்பர்ட் என்பது பெயர்) எக்காரணத்தாலோ தினந்தினம் கொஞ்சம் கொஞ்சமாகக் கல்லாகமாறி வருகிறான். அவன் ஓர் புத்தி கூர்மையுள்ள வைத்திய மாணவன். வைத்தியக் கல்லூரியை அவன் அடைந்ததற்குக் காரணம் தன் நோய்க்கு ஒரு மருந்தைக் கண்டு பிடிப்பதுதான். கல்லூரியிலுள்ள பெரிய டாக்டர்களும் இதா ரசாயன சாஸ்திரிகளும் அவனைப் பார்த்துவிட்டுப் பிரமித்துப் போனார்கள். அவனுக்கு வயது 19 தானாகிறது. அவனது இரகசியம் உற்ற சில பந்துக்கட்கும் டாக்டர்கட்குமன்றி வேறெவருக்கும் தெரியாது. சமீபத்தில் அவன் தந்தை வரி கொடாமல் 'விஸ்கி' வைத்திருந்ததற்காகக் கோர்ட்டி விழுக்கப்பட்டார். அப்போது விசாரணையில் பல உண்மைகளோடு மாணவனின் அபாய நோயும் வெளியிடப்பட்டது. அதுமுதல் அவனுக்குப்பண உதவியளிக்கப் பலர் முன் வருகின்றனர். ஆனால் நோய் தீர்க்கும் டாக்டர்கள் எவரும் முன்வரக் காணோம். அவன் அடியில் வருமாறு கூறினனும்:—

“நான் நோய் தீர்க்கும் வழியைத் தெரிந்து கொள்வதற்காகவே வைத்தியக் கல்லூரியில் சேர்ந்திருக்கிறேன். தந்தையார் என் படிப்புக்குப் பணம் தேடும் பொருட்டுத் திருட்டுச் சாராயம் செய்ய நேர்ந்ததற்காக இருந்துகிறேன். எனது அபூர்வநோய் தோன்றி 3½ வருடங்களாகின்றன. இதுகாறும் டாக்டர்களையும் சுற்றத்தாரையும் தவிர இதை வேறு யாரும் அறியார். என் நோய்க்கு 'கால்சிடோசிஸ்' அல்லது 'மியோசிடிஸ் ஆசிபிக்கன்ஸ்' என்று பெயர் சொல்லப்படுகிறது. நான் நாளுக்கு நாள் பாறைகல் முதலியவைகள் ஆக்கப்பட்டிருக்கும் கால்சியம் கார்பொனேட்டாக மாறிக் கொண்டிருக்கிறேன். பெரும்பான்மையாக எல்லா உணவுப் பொருட்களும் கால்சியம் கலந்திருக்கிறது; ஆதலால் உணவைச் சாப்பிட்டுக் கொண்டே கால்சியத்திற்கு மருந்தை அருந்துவது சாத்தியமல்ல. முதன் முதலில் இந்த நோய் என் கைகளில் தோன்றியது. பின் கால்களைப் பற்றியது. இன்று என்னால் கால்களையும் கைகளையும் உபயோகிக்க முடியும். என் கால் மூட்டுகள், முழங்கால், முழங்கை ஆகியவை வெறும் எலும்பாகவே இருக்கின்றன. பெருவிரலில் பாதியும் வெறும் எலும்பாக இருக்கிறது.”

---

# சென்னையில் மேனகா

நடனக் கலையின் நடு நாயகமாய் இலங்கும் ஸ்ரீமதி மேனகா சென்னைக்கு விஜயம் செய்துள்ளார். இவரது உண்மைப் பெயர் லீலா சோக்கி என்பதாகும். இவரது அற்புதமான கலாஞானத்தால் இந்தியாவிலும் வெளிநாடுகளிலும் நடனக்கலை நன்கு பிரசாரம் செய்யப்பட்டுள்ளது.

சில வருடங்கட்கு முன்பு கைதேர்ந்த சில சங்கீத ஞானிகளுடன் ஸ்ரீமதி மேனகா ஐரோப்பா சென்றார். அநேகமாக எல்லா முக்கிய தேசங்களின் தலைநகர்களிலும் அவரது நடனப் பிரகடனங்கள் நடைபெற்றன. அவற்றைக் கண்டு வியப்புக் கொண்டோர் பலர். ஐரோப்பியப் பத்திரிகைகளில் எண்ணிறந்தன அவரை 'இன்றைய நடனக் கலைஞருள் தலைசிறந்தவர்' என்று புகழ்ந்தன. அவரது கலைத் திறமையும், கைகால் அசைப்புகளின் ரசமும், அழகும், சரீரத்தின் கவர்ச்சியும், வசீகரமும், எளிய, ஆனால் உயர்ந்த தோற்றமும் பார்ப்போரை மயக்குவனவாகும்.

பெயர்போன வடநாட்டு ஆசிரியர்களிடமிருந்து நடனத்தை அவர் கற்றுத் தேறியிருப்பதால் அத்தொழிலுக்கே ஒரு பெருமையைக் கொடுக்கிறார். அன்றி நடனமென்றால் என்னவென்றறியாத சாதாரண மக்கட்கு ஒரு பிரேமையும் ஏற்படுகின்றது. பலர் ஒன்றாகச் சேர்ந்து ஆடும் கூட்டு நடனத்திற்குத் தனியான ஒரு பெருமையுண்டு என்பதை அவர் இன்று உலகம் அறிய நிரூபித்துள்ளார். அநேகமாக இறந்துபட்டதான 'கத்தாக்' நடனம் என்னும் இந்திய நடனத்தை அவரது செல்வக் கால்கள் உயிர்ப்பித்திருக்கின்றன. பலபடியாக—நயம் செறிய—அவர் நடனம் புரிந்தாலும் எல்லாம் சாஸ்திர எல்லைக்குள்ளாகவே இருக்கின்றன. 'கத்தாக்' உண்மையில் துண்டுபட்டு, திரிந்து, கெட்டுப் போயிற்று; எனினும் மேனகா அதை மீண்டு முயிர்ப்பித்தது ஆச்சரியமே.

சென்னையில், வித்யாபதியால் எழுதப் பெற்ற “ராதாவும் கிருஷ்ணனும்” என்ற பகுதியை நடன மூலம் காண்பித்தார். அவரோடு பக்கப் பாட்டுக்காக ஏழு பேர் வந்திருக்கிறார்கள். அவர்களில் ஒருவர் உஸ்தாத் சாகவத் ஹுசேன் கான் ஆவர். திரு. கான் லக்னௌ ஹிந்துஸ்தானி சங்கீதக் கல்லூரியில் பண்டிதராவர்.

ஸ்ரீமதி மேனகாவுக்கு மலையாள நாட்டில் பெயர்போன 'கதகளி'லும் பாண்டித்ய முண்டு. 'கும்மி'யிலும் பழக்கமுண்டென்று சொல்லப்படுகிறது.

---



## இந்திய சட்டசபையில்

# கூ. பா. க. அறிக்கை கண்டனம்

—(o)—

பெப்ரவரி 6-ந்தேதி இந்திய சட்டசபையில் கூட்டுப் பார்லிமெண்டரிக் கமிட்டி அறிக்கை விவாதத்திற்கு வந்தது. காங்கிரஸ் கட்சித் தலைவரான புலாபாய் தேசாய் அவர்கள் ஏற்கெனவே தமது கட்சி மெம்பர்களால் நிறைவேற்றப் பட்டிருந்த தீர்மானமாகிய அறிக்கைக் கண்டனத் தீர்மானத்தைத் தாக்கல் செய்தார். ஜனாப் ஜின்னா அவரது கட்சிடார் நிறைவேற்றியிருந்த கண்டனத் தீர்மானத்தை பிரேரேபணை செய்தார். இரண்டுக்கும் அதிகவித்தியாசமில்லை; எனினும் வகுப்பு வாதம் சம்பந்தமான அபிப்பிராய பேதமிருந்ததால் இரண்டும் சிற்சில வித்தியாசங்களைப் பெற்றிருந்தன.

விவாதத்தின் பின்னர், ஓட்டுக்கு விடப்பட்டபோது, காங்கிரஸ் கக்ஷித் தீர்மானம் 61 சாதகமான ஓட்டுகளாலும் 72 பாதகமான ஓட்டுகளாலும் தோல்வியுற்றது. திரு. ஜின்னாக் கட்சியாரும் சர்க்கார் கட்சியாரும் எதிராக ஓட் போட்டார்கள். பிறகு திரு. ஜின்னாவின் வகுப்புப் பிரச்னை சம்பந்தமான தீர்மானம் விவாதத்திற்கு எடுத்துக் கொள்ளப்பட்டது. அது 68 சாதகமான ஓட்டுகளாலும் 15 பாதகமான ஓட்டுகளாலும் நிறைவேறிற்று. அப்போது காங்கிரஸ் கட்சியாரும் சர். என். என். சர்க்காரும் பொதுவாக விருந்தார்கள். ஜனாப் ஜின்னாவின் வகுப்புத்தீர்ப்பு சம்பந்தமான தீர்மானம் ஓட்டுக்கு வந்தபோது மௌலானா ஷவுக்கதலி பொதுவாக நின்றார்.

திரு. ஜின்னாவின் நிறைவேறிய தீர்மானங்களாவன:—

பல வகுப்புக்களும் பொதுவான ஒரு முடிவிற்கு வரும் வரை வகுப்புத் தீர்ப்பைச் சட்டசபை ஒப்புக் கொள்ளுகிறது.

மாகாண அரசியலைப் பொறுத்தவரை இரண்டாவது சட்டசபை நிருபணம், கவர்னர்களுக்கு அதிகப்படியான அதிகாரம், போலீஸ் இலாகாவைப் பற்றிய புதிய ரூல்கள் முதலியன போன்றவை நிர்வாக இலாகாவிற்கு அதிகப்படியான அதிகாரத்தைக் கொடுத்து, சட்டசபையைச் சக்தியற்றதாக்கி விடுகிறதென்றும், இன்னும் இது போன்ற பல பாதகமான பகுதிகள் அடங்கியிருக்கின்றதென்றும், அதனால் அது திருப்தியின்மையையும் ஏமாற்றத்தையும் அளிக்கின்றதென்றும், இவ்வாறான பாதிக்கத் தகுந்த பகுதிகள் எடுக்கப்படாவிட்டால், இந்தியர்களில் எக்கட்சியினரையும் திருப்தியளிக்காது என்றும் இச்சபை அபிப்பிராயப்படுகிறது.

அகில இந்திய பெடரேஷன் என்று கூறப்படும் மத்திய அரசியல் திட்டத்தைப்பற்றி, அது அடிப்படையாகவே தப்பிதமானதென்றும் இந்தியமக்களால் அங்கீகரிக்கப்பட முடியாதென்றும், ஆகையால் பிரிட்டிஷ் கவர்மெண்டு இத்திட்டத்தை அஸ்திவாரமாகக் கொண்ட எந்தவிதமான சீர்திருத்தத்தையும் அமுலுக்குக் கொண்டு வரக்கூடாதென்று இந்திய அரசாங்கம் அறிவுறுத்த வேண்டும் என்றும், பிரிட்டிஷ் இந்தியாவில் பொறுப்புள்ள அரசாங்கம் ஏற்படுத்துவதற்கு வேண்டியவற்றை உடனே செய்ய ஆலோசிக்கவேண்டும் என்றும், இந்தச் சபை திட்டமாக அபிப்பிராயப் படுகிறது.

திரு. புலாபாயால் பிரேரேபிக்கப்பட்டுத் தோற்றுப்போன தீர்மானங்கள்:—

“சர்க்கார் அளிக்கத் தீர்மானம் செய்திருக்கும் அரசியல் அமைப்பு, ஏகாதிபத்ய அதிகாரம், பொருளாதாரச் சுரண்டல் என்ற உணர்ச்சியில் செய்யப்பட்டிருக்கிறதென்றும், இது இந்திய மக்களுக்கு உண்மையான ஒரு அதிகாரத்தையும் மாற்றுவதில்லையென்றும், இந்த அரசியல் அமைப்பை ஒப்புக்கொண்டால் இந்தியாவின் ராஜீய பொருளாதார முன்னேற்றத்தில் அபிவிருத்தி ஏற்படுவதற்குப் பதிலாக பாதகங்கள் ஏற்படுமென்றும் இந்தியச் சட்டசபை அபிப்பிராயப்படுகிறது. எனவே மேற்கூறிய திட்டத்தை அடிப்படையாகக் கொண்டு ஒரு சட்டமும் செய்யக் கூடாது.”

வகுப்புத்தீர்ப்பு சம்பந்தமாக திரு. தேசாய் கொண்டுபோன தீர்மானம்:—

“வகுப்புத் தீர்ப்பை இத்தருணத்தில் ஒப்புக்கொள்ளுவதாகவோ நிராகரிப்பதாகவோ ஒருவித அபிப்பிராயமும் தெரிவிக்காமலிருப்பதுதான் தேசீய ஒற்றுமைக்கும் பிரச்னைகள் பரஸ்பர ஒப்பந்தத்துடன் தீர்ப்பதற்கும் அதிக உதவி செய்வதாக இருக்கும் என இச்சபை அபிப்பிராயப்படுகிறது.”

---

(6-ம் பக்கத் தொடர்ச்சி)

உரிமை. (4) நமது பண நிர்வாக முறையைக் கட்டுப்படுத்த உரிமை. (5) தினப்படியான, நாட்டு நிர்வாகத்தைக் கட்டுப்படுத்த உரிமை. இது தான் ஒவ்வொரு அரசாங்கத்தின் முக்கியமான பகுதிகள். இவ்விதமாக நோக்கினால், ஒதுக்கி வைக்கப்பட்ட பகுதிகள் என்ற பிறகு வேறு என்ன மீந்திருக்கிறது? வெளிநாட்டுச் சம்பந்தத்தில் தலையிட முடியாது. நாணயச் செலவாணி முறையைத் தீண்ட முடியாது. சமீபத்தில் அமுலுக்கு வந்த ரிஸர்வ் பாங்கி மசோதா அரசியல் அமைப்பிலேயே வேறு ஒரு ஒதுக்கம் செய்திருக்கிறது. அதனுடைய நிபந்தனைகளைக் கவர்னர்-ஜெனரல் சம்மதத்தின் மேல்தான் மாற்ற முடியும். அரசாங்க ரயில்வே நிர்வாகமும் இப்படியாகிவிடும் என்று நினைக்கவேண்டியிருக்கிறது. இதற்குமேல் அதிகப்படியான அதிகாரங்களும், அவசியமான பொறுப்புக்கள் என்ற புதிய அதிகாரங்களும், அரசப் பிரதிநிதிக்குக் கொடுக்கப்பட்டிருக்கிறது. இதற்கு மேலாக வேறு அதிகாரங்கள் கொடுக்கப்பட்டிருக்கின்றன. மத்திய அரசாங்கத்தில் இரட்டை யாட்சியும், மாகாண சுய ஆட்சியும்தான் நான் இன்று விஸ்தரித்த அரசியல் அமைப்பு.

---

## இயன்றவரை அதிகமான உறுப்பினர் சேர்க்க

காங்கிரஸ் மகாசபையின் தலைவர் திரு. ராஜன் பாபு ஓர் சுற்றறிக்கை விட்டு இயன்ற மட்டும் ஏராளமான காங்கிரஸ் உறுப்பினரைச் சேர்க்க வேண்டும் என்கின்றார். போதுமான அளவு மெம்பர்கள் சேரவில்லையானால் மகாசபை குன்றிப்போய் விடுமென்பது அவ் அறிக்கையின் சாரம்.

# செய்தித் திரட்டு.



பாரசீகம் (பெர்ஷியா), பாரசீகத்தார் என்று சொல்லப்படும் பெயர்களை இரான், இரேனியர் என்று வழங்க வேண்டுமென்று பெர்ஷிய சர்க்கார் தீர்மானித்திருக்கிறார்கள்.

* * *

இலங்கையில் மலேரியாவினால் 10 ஆயிரக் கணக்காக மக்கள் இறப்பதைக் கண்டு பம்பாயிலுள்ள ஒரு பார்சி ஸ்திரீ தமது பெயரை வெளியிடாமல் 2000 ரூபாய் நன்கொடை அளித்திருக்கிறார்.

* * *

7–2–35-ந் தேதி மாலை 6 மணிக்குத் தேவகோட்டை ஜவஹர் மைதானத்தில் வக்கீல் திரு. ஆர். கிருஷ்ண ஐயங்கார் தலைமையில் ஒரு கூட்டம் கூடி கூட்டுப் பார்லிமெண்டுக் கமிட்டி அறிக்கையைக் கண்டித்தார்கள்.

* * *

இந்தியச் சட்டசபையில் அக்கிராசனரோ உப அக்கிராசனரோ இல்லாத சமயத்தில் தலைமை வகிக்க (1) ஸர் இ. மில்லர் (2) லாலாராம் சாண்தாஸ் (3) ஸ்ரீ பி. கே. பாஸு (4) ஸர் அக்பர்கான் ஆகியவர் நியமிக்கப் பெற்றிருக்கிறார்கள்.

* * *

காங்கிரஸ் பொதுக் காரியதரிசி ஆச்சார்யா கிருபாலினியின் சொற்படி அ. இ. கா. கமிட்டி ஆபீஸ் பிப்ரவரி 13-ந் தேதி இங்கிருந்து அலகாபாதுக்கு மாற்றப்படும். ஒருவர் தவிர மற்ற உத்யோகஸ்தர்கள் உடனே அங்கு செல்வார்கள்.

* * *

ஜப்பானிலிருந்து அதிகமாகக் கம்பளிச் சாமான்கள் வந்திறங்குவதால் இந்திய கம்பளி வியாபாரம் நஷ்டப்படுகின்றதென்றும் ஆதலால் ஜப்பான் இறக்குமதியைத் தடைசெய்ய வேண்டுமென்றும் பம்பாய் வியாபாரிகள் நிச்சயித்துள்ளார்கள்.

இந்திய சட்டசபையில் கூ. க அறிக்கை விவாதம் நடைபெற்றபோது விசிட்டர் காலரியில் டாக்டர் அன்சாரி, ஸர்தார் படேல், ஸ்ரீ சக்ரவர்த்தி ராஜகோபாலாச்சாரியார், ஸ்ரீமதி சரோஜனி நாயுடு, ஜனாப் சையது முகம்மது, ஜனாப் ஜின்னாவின் குமாரி முதலியோர் உட்கார்ந்திருந்தனர்.

* * *

"மதத்தின் பெயரால் மிருகங்களைப் பலியிடுவது மதத்தை அவமதிப்பதாக ஏற்படுகின்றது. வாயில்லாப் பிராணிகளைப் பலியிடுவதால் ஜனங்கள் தங்களுடைய பாபங்களைப் போக்கிக்கொள்ள முடியாது அல்லது இக்காரியங்களால் அவர்கள் கடவுளண்டை செல்ல முடியாது" என்று குருத்வாரத்தில் நடைபெற்ற யாக சம்பந்தமாகக் கேள்வி கேட்கப்பட்டபோது காந்திஜீ கூறினார்.

* * *

புதிய அரசியல் 1937 ஜனவரி முதல்தான் அனுஷ்டானத்திற்கு வருமென்றும், ஆதலால் அடுத்த பொதுத் தேர்தல் 1936 வருடக் கடைசியில்தான் நடைபெறுமென்றும், டில்லியிலிருந்து ஐக்கிய மாகாண சர்க்காருக்கு வந்த ஒரு உத்தரவினால் தெரிகிறதாம்.

* * *

டில்லியில் தம்மைச் சந்தித்துச் சமரசப் பேச்சுக்கள் நடத்தும்படி, காங்கிரஸ் தலைவர் பாபு ராஜேந்திரப் பிரசாதுக்கு ஜனாப் ஜின்னாவிடமிருந்து ஓர் கடிதம் வந்திருக்கிறது. பிப்ரவரி 12-ந் தேதி பாபு ராஜேந்திரர் டில்லிக்குப் போகிறார். விசேஷ ராஜீய மாறுதல்கள் ஏற்படுமென எதிர்பார்க்கப்படுகிறது.

* * *

சுயேச்சை தினத்தில் காங்கிரஸ் காரியக்கமிட்டி பொதுஜனங்களிடம் நிறைவேற்றி அனுப்பும்படி விட்டிருந்த தீர்மானத்தில் முதல் பாராவையும், இரண்டாவது பாராவில் பிந்திய பகுதியையும் சந்தி இலாகாதார் வங்காளத்தில் கத்தரித்து விட்டார்கள் என்று சொல்லப்படுகிறது.

* * *

சுபாஷ் பாபு எழுதிய இந்தியப்போர் என்ற புத்தகத்தின் காபியொன்றைப் பெற்ற ஐரிஷ் வீரர் டிவாலரா, பாபுவுக்கு "வெகு சீக்கிரத்தில் இந்தியர்கட்குச் சுதந்திரமும் செழிப்பும் கிடைத்துவிடுமென்று நம்புகிறேன்" என்று எழுதியுள்ளார். ஸ்ரீ பாபு, இந்தியாவுக்கும் ஐயர்லாந்துக்கும் வியாபார சம்பந்தமும் நேசபாவமும் உண்டாகும் பொருட்டு அங்கு விஜயம் செய்வார்.

* * *

லெக்ஷிமிபுரம் ஸ்ரீ மீனாக்ஷி சங்கத்தின் 9-ம் ஆண்டு 10-ம் மாதக் கூட்டம் தை 29-ம்நாள் பிற்பகல் 4-மணிக்குச் சொக்கலிங்க வித்தியாசாலைத் தலைமை ஆசிரியர் திரு. வேலாயுதம் அவர்கள் தலைமையில் நடைபெற்றது. அதுகாலை சொக்கலிங்க வித்தியாசாலை உதவி ஆசிரியர் திரு. கோபால் அவர்கள் "கல்வி கற்பதேன்" என்னும் பொருள் பற்றிப் பிரசங்கம் செய்தார்.

* * *

பிப்ரவரி 17-ந் தேதி திருவெண்ணைநல்லூர் கிருபா ஆசிரம நான்காவதாண்டு விழா நாமக்கல் ஸ்ரீ வெங்கிடாசல ரெட்டியார் தலைமையில் நடைபெறும். சென்னை ஸ்ரீமதி வை. மு. கோதைநாயகி அம்மாள் கொடி உயர்த்துவார். "ஊழியன்" ஆசிரியர் ஸ்ரீராய. சொக்கலிங்கன் மகாத்மா காந்தி படப் பிரதிஷ்டை செய்வார். இதைத் தவிர, ஸ்ரீ கே. பாஷியம் அன்று மாலை பொதுஜன ஊழிய சங்கத்தில் ஒரு வாசகசாலையைத் திறந்து வைப்பார். மாலையில் ஒரு பொதுக் கூட்டம் நடைபெறும் என்று அறிவிக்கப்படுகிறது.

* * *




செட்டியார்கள் நடப்பு வட்டி.

| மாதம் | தேதி | சென்னை | இரங்கூன் | பினங்கு | சிங்கப்பூர் |
|---|---|---|---|---|---|
| பவ(ஷு) | | | | | |
| சித்திரை | 31 | 0—8—0 | 0—4—6 | 0—5—6 | 0—5—3 |
| வைகாசி | 32 | 0—7—6 | 0—4—6 | 0 5—3 | 0—5—3 |
| ஆனி | 31 | 0—7—0 | 0—4—0 | 0—5—0 | 0—5—3 |
| ஆடி | 32 | 0—6—6 | 0—4—0 | 0—4—6 | 0—5—3 |
| ஆவணி | 31 | 0—6—0 | 0—4—0 | 0—4—6 | 0—5—3 |
| புரட்டாசி | 30 | 0—6—0 | 0—4—0 | 0—4—0 | 0—4—9 |
| ஐப்பசி | 30 | 0—6—6 | 0—4—0 | 0—4—0 | 0—4—6 |
| கார்த்திகை | 30 | 0—7—0 | 0—4—0 | 0—4—0 | 0—4—3 |
| மார்கழி | 29 | 0—6—6 | 0—4—6 | 0—4—0 | 0—4—3 |
| தை | 29 | 0—7—0 | 0—5—0 | | |

## வட்டி விகிதம்

இம்பீரியல் பாங்க்:—மூன்றரை பெர் [செண்டு.

இங்கிலாந்து பாங்க்:—இரண்டு பெர் [செண்டு.

கோழும்பு நடப்பு வட்டி.

1935 ஜனவரி 0—6—0

இரங்கூன் தவணை வட்டி.

பவ தை 15௳ 0—4—6

பினங்கு 3மீ தவணை வட்டி.

பவ ஆடி 17௳ 0—4—0
„ புரட்டாசி 1௳ 0—3—6

சிங்கப்பூர் 3மீ தவணை வட்டி.

பவ கார்த்திகை 1௳ 0—4—0
„ „ 16௳ 0—3—9
„ மார்கழி 1௳ 0—3—9
„ „ 16௳ 0—3—9

## உண்டியல் விலை

ஸ்டெர்லிட்ஸ் விற்பனை 157¼
„ 30 நாள் தவணை வாங்குவது 150

## ரப்பர்

லண்டன், பிப். 11௳

லண்டன் ஷீட் ஸ்பாட் ரப்பர் விலை
வாங்குவோர் 6 5/16 பென்ஸ்.
விற்பவர் 6 3/8 பென்ஸ்.

## லண்டன், லிவர்ப்பூல் ரப்பர் ஸ்டாக்கு

—பிப். 11௳

லண்டனில் இந்த வாரம் முடிவுவரை இருப்பு ரப்பர் 83,622 டன்கள். பிப் 9ந் தேதி முடிவுவரை ஏற்றுமதி செய்யப் பட்டது 1,120 டன்கள்.

லிவர்ப்பூலில் கை இருப்பு ரப்பர் 67,043 டன்கள். இந்த வாரம் ஏற்றுமதி செய்யப்பட்டது. 250 டன்கள்.

## கப்பல்.

சென்னையிலிருந்து:— ரங்கூன்

எத்தியோப்பியா: பிப்ரவரி 18ந் தேதி வந்து 22ந் தேதி போகும்.

எரின்புரா: பிப்ரவரி 25ந்தேதி வந்து மார்ச்சு 1ந் தேதி போகும்.

எத்தியோப்பியா: மார்சு 4-ந் தேதி வந்து 8-ந் தேதி புறப்படும்.

எரின்புரா: மார்ச்சு 11ல் வந்து 15ல் புறப்படும்.

வெள்ளிக்கிழமை தோறும் ரங்கூனுக்கு மெயில் கொண்டு போகப்படும்.

### லண்டன்

கிளான்மக்நாட்டன்: பிப்ரவரி 18ந்௳ வரும்.

கிளான்மாக்கைவேர்: மார்ச்சு 6-ந்௳ வரும்.

### மலேயா

ரஜூலா: பிப்ரவரி 23-ந் தேதி வந்து 26-ந் தேதி புறப்படும்.

### பாண்டிச்சேரி, சிங்கப்பூர், செய்கோன்

அஜே-லி-ரிடோ: பெப்ரவரி 20ந் தேதி வரும்.

லேகோந்தேலில்: மார்ச்சு 19௳ வரும்.

## தங்கம், வெள்ளி

சென்னை, பிப். 12௳

| | |
|---|---|
| சவரன் (சில்லரை) | 22—4—[illegible] |
| „ மொத்தமாக | 22—4—[illegible] |
| ஆலைத்தங்கம் தோலா 1-க்கு | 34-15—[illegible] |
| மூலா தங்கம் „ | 34—9—[illegible] |
| வெள்ளி | |
| 1 ரூபா எடைக்கு | 0—10—[illegible] |
| 100 ரூபா எடைக்கு | 67—0—[illegible] |





Printed and published by Rama Kasinathan for the India Publications Ltd., at the Oolian Power Press, 56, Thambu Chetty Street, Madras.

